# இரண்டாவது இடம் யாருக்கு?





"அண்ணா காலத்திலேயே, அண்ணாவுக்கு அடுத்தபடியாக, இரண்டாவது இடத்தை வகித்து வந்தவர் நெடுஞ்செழியன். எம்.ஜி.ஆர். சிகிச்சைக்காக அமெரிக்கா சென்றபோது கூட, அவருடைய பொறுப்புக்களை நெடுஞ்செழியன்தான் கவனித்துக் கொண்டார். அப்படியிருந்தும் இப்போது எம்.ஜி.ஆர். தமது பொறுப்புக்களைத் திடீரென்று பண்ருட்டி ராமச்சந்திரனிடம் ஒப்படைத்திருப்பது பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? பண்ருட்டி மறைமுகமாக இ. காங்கிரஸுடன் தொடர்பு கொண்டிருப்பவர் என்று, அ.தி.மு.க. வினரே ஒரு காலத்தில் குற்றம் சாட்டினார்கள் என்ற நிலையில், இப்போது பண்ருட்டியிடம் பொறுப்புக்களை ஒப்படைத்ததன் மூலம் தமிழக ஆட்சியில் இ. காங்கிரஸ் கட்சி மறைமுகமாக வேரூன்றியிருப்பதாகச் சொல்லலாமா?"

— இந்தக் கேள்விகளுக்கு இவர்களின் பதில்......

**நெடுமாறன்** (தலைவர், தமிழ்நாடு காமராஜ் காங்கிரஸ்):

இதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமே இல்லை. இப்படிப்பட்ட அவமானங்கள் என்பது இந்திரா காந்தி காலத்திலேயே ஆரம்பமாகிவிட்டன. அப்போது பிரம்மானந்த ரெட்டி உள்துறை அமைச்சராக இருந்தாலும் முக்கிய பொறுப்புக்கள் அவரிடம் இல்லை. உள்துறை ராஜாங்க அமைச்சரான ஓம்



மேத்தாவிடம்தான் இருந்தன. அதேபோல் சி. சுப்ரமணியம் நிதியமைச்சராக இருந்தாலும் முக்கியமான பொறுப்புக்களை வகித்தது ராஜாங்க அமைச்சராக இருந்த பிரணாப் முகர்ஜிதான். அதே கதைதான் டெல்லியில் இப்போது ராஜீவ் காந்தியிடமும் தொடர்கிறது. தமிழகத்தில் எம்.ஜி. ஆர். தலைமையிலும் தொடர்கிறது. 'இதுதான் விதி' என்று சம்பந்தப்பட்டவர்களே சும்மா இருக்கும் போது, நாம் ஏன் அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டும்? அதோடு, ஏதோ அ.தி.மு.க.வில் உள்ள பண்ருட்டி ராமச்சந்திரன்தான் இ. காங்கிரஸ் ஆளாக மாற வாய்ப்பிருப்பது போல் எண்ணத் தேவையில்லை. வாய்ப்புக் கிடைத்தால் அக்கட்சியிலுள்ள எல்லோருமே இ. காங்கிரஸ் ஆளாக இருக்கத் தயார்ராய்த்தான் இருக்கிறார்கள்!

## திண்டிவனம் ராமமூர்த்தி (இ. காங்கிரஸ்):



தனிப்பட்ட முறையில், எனது நண்பரும் எனது மாவட்டத்துக்காரருமான பண்ருட்டி ராமச்சந்திரன் அவர்கள், முதலமைச்சருடைய அனைத்துப் பணிகளையும் பார்க்கிற வகையில், முதல்வர் உத்தரவிட்டுள்ளது எனக்கு மகிழ்ச்சியைத்தான் அளிக்கிறது. ஆனால், ஓர் அமைச்சரவையின் செயல்முறை என்று பார்க்கும்போது, இது ஒரு தவறான வழிகாட்டுதலாக அமைந்திருப்பதாகவே கருதுகிறேன். முதல்வருடைய நம்பிக்கையை யார் பெற்றிருக்கிறார்களோ அவர்கள்தான் இந்தப் பணியைப் பார்க்க வேண்டும் என்றாலும்— அந்த வகையில்தான் பண்ருட்டியிடம் பொறுப்புக்கள் ஒப்படைக்கப்பட்டுள்ளன என்றாலும் இந்த முறையில் ஒப்படைத்திருக்கக் கூடாது. அவரை ஒரு துணை முதல்வராக நியமித்தோ அல்லது தமது அமைச்சரவையில் இவர்தான் சீனியர் அமைச்சர் என்று முதலிடம் கொடுத்தோதான் நியமித்திருக்க வேண்டும். இப்படி ஏதுமில்லாமல், ஏறத்தாழ தமது முதல்வர் பொறுப்பு முழுவதையும் பண்ருட்டி பார்ப்பார் என உத்தரவிட்டுள்ளது தவறான முன்னுதாரணத்தையும் நிர்வாகக் குழப்பத்தையும் உருவாக்கியிருப்பதாகவே கருதுகிறேன். முதல்வரின் பொறுப்புக்களை நாவலர் நெடுஞ்செழியனிடம் ஏன் ஒப்படைக்கவில்லை என்ற கோணத்தில் நாம் விமர்சிக்கத் தேவையில்லை, காரணம், நாவலர் அவர்கள் அறிஞர் அண்ணா அவர்கள் காலத்திலிருந்தே தம்முடைய நிலைமை எவ்வளவு குறைந்தாலும் அல்லது குறைக்கப்பட்டாலும் எதையும் தாங்குகிற இதயத்தோடு — இதையும் தாங்குகிற இதயம் உண்டு என்று தமிழகத்துக்கு எடுத்துக்காட்டாக விளங்கி வருபவர்! அப்புறம் பண்ருட்டி இ. காங்கிரஸுக்குச் சாதகமாக இருப்பார் என்பது மிகவும் தவறு. அவர் எப்போதுமே இ. காங்கிரஸுடனை உறவைத் தமக்குச் சாதகமாகத்தான் பயன்படுத்திக் கொள்வார்.

## மு. கருணாநிதி: (தி. மு. க.)

நாவலர் இதை அசிங்கமாக நினைக்க மாட்டார். சிங்கம் சர்க்கஸுக்குள் போய் விட்டால் ரிங் மாஸ்டர் சொன்னபடிதான் ஆடியாக வேண்டும். இதனால் பண்ருட்டிக்குக் கொத்தாப்பு வந்துவிட்டதாக அர்த்தமல்ல. காரணம், கோட்டையிலிருந்து செல்லும்



பைல்கள் ராமாவரம் தோட்டத்திற்குச் சென்று, பிறகு போயஸ் கார்டன் சென்று, அங்கே வைக்கப்படும் ஸ்லிப்புகளுடன்தான் மறுபடியும் கோட்டைக்கு வருகின்றன. இதனால் — பண்ருட்டிக்கு முதல்வர்-பொறுப்புக்கள் கொடுக்கப்பட்டிருப்பதால் — இ. காங்கிரஸின் பலம் கூடியிருக்கிறதா என்ப

தெல்லாம் எனக்குத் தெரியாது. ஆனாலும் ஒரு கட்சியில் இருக்கும்போதே இன்னொரு கட்சியோடு தொடர்பு வைத்திருப்பவர்தான் பண்ருட்டி. இது எனது கடந்த கால அனுபவம்.

**சோ:**



நெடுஞ்செழியன் அமுக்கப்படும் 'ட்ரெண்ட்' என்பது கருணாநிதி காலத்திலேயே ஆரம்பமாகிவிட்டது. அப்போதே அதற்கு எம்.ஜி. ஆரும் உடந்தையாகத்தான் இருந்தார். அதுதான் இப்போதும் தொடர்கிறது. ஒருவரைத் தூக்குவதும் 'அமுக்குவதும் — இன்றைக்குக் கொடுத்த அதிகாரங்களை நாளைக்கே பிடுங்கிக் கொள்வதும் எம்.ஜி. ஆர். ஆட்சியில் சர்வ சாதாரணம். அப்புறம், எம்.ஜி.ஆரே மத்திய அரசுக்கு விரோதமான போக்குக் கொண்டவரில்லை என்கிறபோது பண்ருட்டியையும் இ. காங்கிரஸையும் முடிச்சுப் போட வேண்டிய அவசியமே இல்லை.

**வி.ராஜசேகரன்** (பொதுச் செயலாளர், அ.இ. சிவாஜி மன்றம்):.



பல்வேறு பிரச்னைகளில் மத்திய அரசுடன் பேசுவதற்கு முதல்வர், பண்ருட்டி அவர்களையே அழைத்துச் சென்றிருக்கிறார். பண்ருட்டி அவர்களுக்குப் பிரதமர் முதல், இதர அமைச்சர்கள் எல்லோரும் நன்கு அறிமுகமானவர்களாக இருக்கிறார்கள். ஆகவே அப்படிப்பட்ட ஒருவருக்குப் பொறுப்புக்களை அளித்தால் மத்திய அரசுடன் சுமுகமான சூழ்நிலையில் தொடர்ந்து செயல்பட வாய்ப்புண்டு என்ற அடிப்படையில் பொறுப்புக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன என்பது என் கருத்து. இந்த ஒரு காரணத்தினாலேயே, பண்ருட்டி இ. காங்கிரஸின் ஆள் என்றும், பின்பக்கமாக இ. காங்கிரஸ், ஆட்சிக் கட்டிலைப் பிடிக்க முயற்சி செய்கிறது என்பதும் ஆதாரமில்லாத குற்றச்சாட்டுகள். ஆதலால் தமிழ்நாட்டில் மீண்டும் காங்கிரஸ் ஆட்சிக்கு வருமானால் அது தேர்தல் மூலம், மக்களின் செல்வாக்கோடு, நம்பிக்கையைப் பெற்றுத்தான் வருமே தவிர, கொல்லைப்புற வழிகளை ஒருநாளும் கைப்பற்றாது.

**கவிவரதன்**

**(ஜனதா):**



அ. தி. மு. க. என்பது தற்போது காங்கிரஸின் துணை அமைப்பாகச் செயல்பட்டுக் கொண்டு வருகிறது. இதன் முதலும் முடிவும் எம். ஜி. ஆர்தான் என்பதில் சந்தேகமில்லை. முதல்வர் அவர்களுக்கு உடம்பு சரியில்லை என்பதும் அவர் சிகிச்சைக்காக அமெரிக்கா செல்கிறார் என்பதும், நாடறிந்த ஒரு விஷயமாக இருக்க, இந்தச் சூழ்நிலையில் தூசி படிந்திருக்கும் ஃபைல்களைத் தட்டி எடுத்து அரசு யந்திரத்தைச் செயல்பட வைக்க இளைஞரும் திறமைசாலியுமான பண்ருட்டியால்தான் முடியும் என்று முதல்வர் நம்புகிறார். அதனால் கொடுத்திருக்கிறார். நெடுஞ்செழியனைப் பொறுத்தவரை, தன்மானம் என்றெல்லாம் பார்க்கத் தற்போது அவர் தயாராக இல்லை. எந்தச் சூழ்நிலையிலும் தமது இடத்துக்கு ஆபத்து வராமல் இருந்தால் போதும் என்ற நிலையில் அவர் இருக்கிறார்.

**முசிறிப்புத்தன்.**

**(அ.இ.அ.தி.மு.க.):**

எங்கள் கட்சியின் சாதாரணத் தொண்டன் நான். ஒரு வீடு தீப்பிடிக்கும் என்றால், அந்த வீட்டிலுள்ள எலிகளுக்கு முதலிலேயே தெரியுமாம். அவை வெளியே ஓடி விடுமாம். நாங்கள் அந்த எலிகளைப் போன்ற



வர்கள் அல்ல. தலைவர் வாழ்வே எங்கள் வாழ்வு. அவர் சுட்டுவிரல் காட்டும் பாதையே எங்கள் பாதை. பண்ருட்டியிடம் பொறுப்பைக் கொடுத்திருக்கிறார் என்றால் தற்போது இருக்கும் அமைச்சர்களிலேயே பண்ருட்டி அபாரத் திறமையுடன் செயல்படுகிறார் என்று முதல்வர் நினைப்பதுதான். அதேபோல் கட்சியில் அல்லது ஆட்சியில் ஒருவருக்குப் பொறுப்புகள் கொடுக்கப் படவில்லை என்பதாலேயே அவர்களைப் புரட்சித் தலைவர் அவர்கள் புறக்கணித்து விட்டதாகவும் அர்த்தமல்ல! இந்நிலையில் பண்ருட்டி இ. காங்கிரஸ் கட்சி ஆள் என்று கருணாநிதி கோஷ்டியினர் பிரசாரம் செய்வது கிஞ்சித்தும் ஆதாரமற்றது. இ. காங்கிரஸ் கட்சியின் உற்ற துணைவனாக எங்கள் கட்சி செயல்பட்டு வரும் சூழ்நிலையில், உறவைக் கெடுக்கச் சதி செய்கிறார்கள்.

**ரகுமான்கான்**
**(தி.மு.க.):**



1957 இல் திருச்சியில் நடந்த தி. மு. க. வின் இரண்டாவது மாநில மாநாட்டில் அண்ணா அவர்கள் நெடுஞ்செழியனைப் பார்த்து, 'தம்பி வா! தலைமை ஏற்க வா! ஆணையிடு, அடங்கி நடக்கிறோம்!' என்றழைத்தார். அது ஒரு காலம்! இப்போது இரண்டாம் இடத்தையும் இழந்து பரிதாபமாக நிற்கும் நெடுஞ்செழியனுக்காகத்தான் அண்ணா அவர்கள் அன்றே 'எதையும் தாங்கும் இதயம் வேண்டும்' என்று சொன்னார்கள் போலும்! பண்ருட்டிக்குப் பொறுப்புக் கொடுத்ததென்பது முழுக்க, முழுக்க, மத்திய அரசின் ஏற்பாடு. இதில் சந்தேகமில்லை. நெடுஞ்செழியனைப் பொறுத்த மட்டில் தமது நிலை எப்படியிருந்தாலும் தமது உடைமைகளைத் தக்க வைத்துக் கொள்வதில் கண்ணும் கருத்துமாக இருப்பவர் என்பது மறுபடியும் நிரூபணமாகி இருக்கிறது.

**ஏ. கே. ஏ. அப்துஸ் சமது**
**(முஸ்லீம் லீக்):**



முதல்வர், பொறுப்புக்களைப் பகிர்ந்து கொடுத்தது ஒரு வரவேற்கத் தக்க விஷயம். முதல்வர் உடல்நிலை சரியில்லாத நிலையில் அரசு இயங்க வேண்டும் என்ற நல்லெண்ணத்தில் செய்யப்பட்ட ஏற்பாடு இது. அதுவும் பண்ருட்டி போன்ற இளமைத் துடிப்புள்ள திறமைசாலிக்குப் பொறுப்புக்களைக் கொடுத்தது பொருத்தமான செயல். இரண்டாவது இடத்தில் இருப்பது நெடுஞ்செழியனா, பண்ருட்டியா என்ற பிரச்னை இப்போது எழவில்லை. காரணம் நெடுஞ்செழியன்தான் இரண்டாவது இடத்தை வகிப்பவர் என்று எம். ஜி. ஆர். எப்போதாவது சொல்லியிருக்கிறாரா? இலாக்காக்களை மாற்றிக் கொடுப்பதும், மந்திரிகளை நீக்குவதும், சேர்ப்பதும், முதல்வரின் விருப்பம்தான்.

**கே. ஏ. கிருஷ்ணசாமி**
**(அ.இ.அ.தி.மு.க.):**



இது ஒரு நிர்வாக ஏற்பாடுதான். பண்ருட்டி அவர்களுக்கு இந்தப் பொறுப்பை அளித்தது பற்றிப் பொது மக்களிடம் இருந்து எதிர்ப்பு வந்ததா என்ன? 'இரண்டாவது இடத்தில் நெடுஞ்செழியன்தானே இருந்தார்!' என்பது போன்ற கேள்விகளுக்கு என்னால் பதில் சொல்ல முடியாது. இந்த விஷயத்தில் எனக்கென்று ஒரு கருத்து இருக்குமேயானால், அதை எங்கள் கட்சியின் செயற்குழு, பொதுக்குழுக் கூட்டங்களில் சொல்வேனே தவிர, வெளியில் சொல்ல மாட்டேன். கட்சிக்குக் கட்டுப்பட்டவன் நான்

இந்தியாவில் அதிகமாக விற்பனையாகும் மெத்தை. Kurl-on®

கண்டெடுத்தது தன் துணைக்காக Kurlopillo




இப்பொழுது நீங்கள் வெற்றிக் குழுவில் போட்டியிடலாம். இரவின் நிகரற்ற வசதிக்காக.
KURLOPILLO தரமான சுகம் தரும் தலையணை. தூங்கும் பொழுது தலைக்கும், கழுத்திற்கும் சிறந்த சுகத்தை தருகிறது.

இரண்டு துணைபடைப்புகளுடன் தயாரிக்கப்பட்ட KURLOPILLO நிம்மதியான நித்திரை செய்பவர்களுக்கு தேவை. கல்பனா தலையணை சிறந்த சுகத்தை நாடுபவர்களுக்காக தயாரிக்கப்பட்டது. டிரீம்லினர் தலையணை உயர்தர காதலர்களுக்காக தயாரிக்கப்பட்டது
KURLOPILLO மக்களின் வசதிக்காக KURL-ON தொழில் நுட்ப வல்லுனர்களால் தயாரிக்கப்பட்டது.

# Kurlopillo & Kurl-on®

மொத்தத்தில், இரவில் சிறந்த முறையில் ஓய்வு எடுப்பதிற்காகவே தயாரானவை.

கர்னாடகா கன்ஸூமர் பிராடக்ட்ஸ் லிமிடெட்
மார்க்கெட்டிங் பிரிவு.
முதல் மாடி, 83, கெங்கல் ஹனுமந்தையா ரோடு, பெங்களூர்-560 027 போன்:-224676

எல்லா கர்லான் விற்பனையாளர்களிடம் கிடைக்கும்.
ஏரியா அலுவலகம்:- சென்னை போன்:-810710; சிப்காட் (P.O) குருவாய, ஒசூர்-26

என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

**ஜனா கிருஷ்ணமூர்த்தி**
**(பாரதீய ஜனதாக் கட்சி):**



அண்ணா முதல்வராய் இருந்த காலத்திலிருந்தே இரண்டாவது இடத்தில் இருந்து வந்த நெடுஞ்செழியனுக்குப் பதிலாக, இப்போது எம்.ஜி.ஆர். பண்ருட்டி ராமச்சந்திரனுக்கு அதிக அதிகாரங்களைத் தந்திருக்கிறார். காரணம், எம்.ஜி.ஆர். எப்போதுமே திடீர் முடிவுகளை எடுக்கும் வழக்கமுடையவர். சில சமயம் சிலருக்கு முக்கியத்துவம் கொடுப்பார்; அதை வைத்து அவரது அரசியலைக் கணிக்க இயலாது. எம். ஜி. ஆரின் முக்கியமான ஒரே எதிரி கருணாநிதிதான். எக்காரணம் கொண்டும் தி. மு. க. ஆட்சிக்கு வருவதை எம். ஜி. ஆர். அனுமதிக்க மாட்டார்; தாங்கிக் கொள்ள மாட்டார். கடந்த ஒரு வருடமாய் எம். ஜி. ஆர். இ. காங்கிரஸுடனான தமது நெருக்கத்தை அதிகரித்துக் கொண்டு வந்துள்ளார். அதனால்தான் இ. காங்கிரஸின் நன்னோக்கில் உள்ள பண்ருட்டி ராமச்சந்திரனுக்கு அதிக முக்கியத்துவம் தரப்படுகிறது. அதோடு, தமக்குப் பின் தம் கட்சியை நிர்வகிக்க — கட்டிக் காக்கத் தகுதியானவர்கள் யாரும் இல்லை என்பது எம். ஜி. ஆரின் தீர்மானமான முடிவு; தமக்குப் பின் பாதிப்பேர் தி. மு. க. வுக்கே போய், மீண்டும் தி. மு. க. ஆட்சிக்கு வந்துவிடுமோ என்கிற பயத்திலும், தி. மு. க. வுக்கு மாற்றுச் சக்தியாய் இருக்கும் சக்தி, தமிழகத்தில் அ. தி. மு. க. வைத் தவிர இந்திரா காங்கிரஸுக்கு மட்டுமே உண்டு என்கிற எண்ணத்திலும்தான் எம். ஜி. ஆர். அ. தி. மு. க. — இ. காங்கிரஸ் உறவை நெருக்கப்படுத்திக் கொள்கிறார். இதில் இ. காங்கிரஸ் நிர்ப்பந்தம் ஏதுமிருக்க முடியாது. முழுக்க முழுக்கத் தனிப்பட்ட முறையில் எம். ஜி. ஆர். எடுத்திருக்கும் முடிவுதான் இந்த நடவடிக்கை என்பது என் கருத்து.

**தா. பாண்டியன்**
**(இந்திய கம்யூனிஸ்ட் கட்சி):**

ஓர் அமைச்சருக்கு அதிக அதிகாரங்களை வழங்குவது போன்ற நடவடிக்கைகளையெல்லாம், மக்கள் சீரியஸாய் எடுத்துக் கொள்ளவே மாட்டார்கள். திடீரெனப்



பத்து பேர் வீட்டுக்கு அனுப்பப்பட்டபோது, தமிழகம் கொதித்தெழுந்ததா அல்லது மகிழ்ச்சியில் ஆர்ப்பரித்ததா? இரண்டும் இல்லையே! மேலும் அதிகப் பொறுப்புத் தரப்படுவதாலேயே பண்ருட்டி இரண்டாம் இடத்தைப் பெற்றுவிட்டார் என்பதும் சரியில்லை. ஆர். எம். வீரப்பன் அமைச்சராய் இருந்தபோது வரிசைப்படி நான்காவது, அல்லது ஐந்தாவது இடத்தில்தான் இருந்தார். ஆனால் அதிகாரம் — ஆட்டிப் படைக்கும் சக்தி அவரிடம்தானே இருந்தது! அதோடு, மந்திரி சபையில் இடம் பெறாதவர்களிடம் கூடத்தான் அதிகாரங்கள் இருந்தன; இருக்கின்றன. எனவே, எம். ஜி. ஆரின் இந்த நடவடிக்கை பெரிய விளைவுகளை ஏற்படுத்தும் என நான் நம்பவில்லை; இதே அதிகாரங்களை எம். ஜி. ஆரே திரும்ப எடுத்துக் கொண்டு, வேறு ஒருவரிடம் ஒப்படைக்க எத்தனை நேரமாகும்? மொத்தத்தில் தமிழகத்தில் அரசியல் ரீதியிலும் சரி, மக்களிடையேயும் சரி ஒரு தேக்க நிலைதான் நிலவுகிறது.

**எஸ். டி. எஸ்.**
**(அ. இ. அ. தி. மு. க.):**



முதலமைச்சர் என்கிற முறையில் ஒருவருக்கு அமைச்சர் பதவி தரவோ, அமைச்சர் பதவியிலிருந்து நீக்கவோ — அதிகப்படியான அதிகாரங்களைத் தரவோ, கொடுத்த அதிகாரங்களைப் பறிக்கவோ பரிபூரண உரிமை உண்டு. அதை யாரும் கேள்வி கேட்க முடியாது. அடுத்ததாக, இந்திரா காங்கிரஸ், அ. தி. மு. க. வை விழுங்கும் நடவடிக்கையின் முதல் படிதான் பண்ருட்டிக்கு அதிக அதிகாரங்கள் தரப்பட்டிருக்கிறது என்பது, ஆதாரமில்லாத, அபத்தமான பிரசாரம்.

புகைப்படங்கள்: **சுபா**

தொகுப்பு: **ப்ரியன், ஜூலி.**

# முடிந்ததைச் செய்கிறார்கள்



• பெரியோன்: இன்னமும் பிரச்னைதான்!



• தொழிலாளர் குடியிருப்பு: பூட்டியே கிடக்கிறது.

**கடந்த 8.6.86 மற்றும் 15.6.86 தேதியிட்ட இரண்டு கல்கி இதழ்களிலும் கன்னியாகுமரி மாவட்டப் பிரச்னைகள் பற்றி எழுதியிருந்தோமல்லவா! இப்போது அந்தப் பிரச்னைகளுக்கு என்னென்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன? இதோ இந்த ஆண்டு நாம் செய்த ரீ—விசிட் ரிப்போர்ட்......**

'அரசு ரப்பர் கழகமா? ஊழல் கழகமா?' என்ற தலைப்பில் கல்கியில் கட்டுரை வெளியானதைத் தொடர்ந்து, கீரிப்பாறையிலுள்ள அரசு ரப்பர் கழக ஊழல் பற்றிய விசாரணைக்கு உடனடியாக உத்தரவிடப்பட்டு, அதன் மானேஜிங் டைரக்டர் பத்மநாபன், மாவட்ட வனத்துறை அலுவலர் மணி ஆகியோரையும் மற்றும் சிலரையும் மாற்றல் செய்திருக்கிறார்கள். தொழிலாளர்கள் ரப்பர் மரங்களிலிருந்து பிடித்து வரும் ரப்பர் பாலின் அடர்த்தியைக் கணக்கிடுவதில் தில்லுமுல்லு செய்து கொண்டிருப்பதாகத் தொழிலாளர்களால் குற்றம் சாட்டப்பட்ட 'கெமிஸ்ட்'டை சஸ்பெண்ட் செய்து விட்டார்கள்.

முன்பு, சம்பந்தப்பட்ட அதிகாரிகள் ஸ்கிராப் ரப்பரைக் கேரளாவிலுள்ள முதலாளிகளுக்கு விற்றுக் கமிஷன் பெற்றுக் கொண்டிருந்ததைக் குறிப்பிட்டிருந்தோமல்லவா! இப்போது அந்த விற்பனை நிறுத்தப்பட்டு, இங்கேயே அந்த ஸ்கிராப் ரப்பரைக் கொண்டு ரப்பர் ஷீட்கள் தயாரிக்கிறார்கள். புகைந்து போயிருந்த ஸ்மோக் ஹவுஸைப் புதுப்பிக்கும் வேலையும் நடந்து கொண்டிருக்கிறது. இருந்தாலும் இந்தப் புதிய நிர்வாகத்திலும் ஒரு சில குறைகள் இருப்பதாகத்தான் சொல்கிறார்கள் தொழிலாளர்கள். "இன்னும் சீர்திருத்தப்பட வேண்டிய விஷயங்கள் ரப்பர் கழகத்தில் நிறையவே இருக்கின்றன!" என்றார்கள்.

"இவற்றோடு எங்களுக்கென்று கட்ட ஆரம்பித்த குடியிருப்புகள் இன்னமும் சில முடிக்கப்படாமல் பாழடைந்து கொண்டிருக்கின்றன. கட்டி முடிக்கப்பட்ட குடியிருப்புகளில் பல கொடுக்கப்படாமல் அப்படியே பூட்டி வைத்தபடி கிடந்து வீணாகிக் கொண்டுள்ளன. கொடுக்கப்பட்ட சில குடியிருப்புகளுக்கு இன்னமும் மின் இணைப்பு, குடிநீர் வசதி என்று எதுவுமே செய்து தரவில்லை என்பதையும் சேர்த்தே எழுதுங்க சார்...!" என்றார்கள் தொழிலாளர்கள்.

ஆக, ரப்பர் கழகத்தைப் பொறுத்த வரை பாதி மகிழ்ச்சியும் பாதி வருத்தமுமாகத்தான் திரும்ப வேண்டியிருந்தது. இனியாவது இந்த மீதி வருத்தத்தையும் போக்க அரசு உடனடியாக நடவடிக்கை எடுக்குமென்று நம்புகிறோம்.

அடுத்து, 'இந்தச் சமுத்திரக் கன்னிக்குக் கல்யாணம் எப்போது?' என்று குளச்சல் துறைமுகத்தைப் பற்றி முன்பு எழுதியிருந்தோமே, அங்கு சென்றோம். பழையபடி குளச்சல் நகர் மன்றத் தலைவர் ஜேசையாவையே சந்தித்துக் கேட்டோம்.

"அதை ஏன் சார் கேட்கறீங்க? எருமை மாட்டு மேலே மழை பெய்த கதைதான்.



• குளச்சல் கடற்கரை: இப்போதைக்குக் கல்யாணம் இல்லே!



• ஜேசையா: கொடுமை சார், கொடுமை!

குளச்சல் துறைமுகம் பற்றி எவ்வளவோ எடுத்துச் சொல்லியாச்சு. நகர்மன்றக் கூட்டத்தில் கூட ஓர் அவசரத் தீர்மானம் போட்டாச்சு. சுல்லியிலும் வெளி வந்தாச்சு... இத்தனைக்கு அப்புறமும் இந்த அரசு ஏதும் செய்யலேன்னு, நாங்கள் என்ன தான் செய்ய முடியும்?

''துறைமுக அபிவிருத்தித் திட்டத்திற்கான மதிப்பீட்டுக்கு அங்கீகாரம் வழங்காமல், வரவு—செலவு மதிப்பீட்டில் குளச்சல் துறைமுகத்துக்காக ஆண்டுதோறும் நிதி ஒதுக்கீடு செய்வதும், பிறகு வேறு திட்டங்களுக்கு அந்த நிதியை மாற்றிச் செலவு செய்வதும் சரியான கேலிக் கூத்துதான். இதுவரைக்கும் துறைமுக அலுவலகத்திற்கு ஓர் அனுகுசாலை போட்டதோடு சரி, வேறு எந்த வேலையும் நடைபெறவில்லை.

''இந்த நிலையில் கடந்த மாதம் குமரி மாவட்டத்திற்கு வந்திருந்த தமிழகப் போக்குவரத்துத் துறை அமைச்சர் முத்துசாமி, குளச்சலில் நடைபெற்ற கூட்டத்தில் பேசும்போது, 'இன்னும் ஒரே மாதத்தில் குளச்சல் துறைமுக அபிவிருத்திப் பணிக்கு அடிக்கல் நாட்டுவோம்...!' என்று பேசிவிட்டுச் சென்றார். சென்றவர் சென்றவர்தான். மாதம் இரண்டாகும்நிலையிலும்ஏதும்நடக்கவில்லை.

''இதற்கிடையில் இது தொடர்பாக நான் இரண்டு மாதங்களுக்கு முன்பு, சென்னையிலுள்ள ஒரு முக்கிய அதிகாரியைச் சந்தித்துக் கேட்டபோது, 'குளச்சல் துறைமுகத்தை அபிவிருத்தி செய்வதால் அரசுக்கு எந்தவிதமான லாபமும் இல்லே. மணவாளக்குறிச்சி மணலாலேக்குத்தான் லாபம். எனவே, நீங்கள் உங்கள் பகுதியில் ஓர் அனல் மின் நிலையம் வேண்டுமென்று கேட்டுப் பெறுங்கள். அப்போது ஆட்டோமேட்டிக்காகத் துறைமுகமும் அபிவிருத்தியாகிவிடும்' என்றார். ஆக, 'பழையது கொடுங்கள்' என்றால், 'பாயசம் கேட்டால்தான் பழையதும் சேர்த்துக் கிடைக்கும்' என்னும் நிலே. கொடுமை சார், கொடுமை!'' என்றார் ஜேசையா.

அப்புறம் சுற்றுலாத்தலமான கன்னியாகுமரிக்குச் சென்றோம். முன்பு பஸ் ஸ்டாண்ட் வசதியே இல்லாமல் இருந்தது. இப்போது நாற்பது லட்சம் செலவில் நவீன

• கன்னியாகுமரி: புதிய பஸ் ஸ்டாண்ட்.



பஸ் ஸ்டாண்ட் ஒன்று கட்டியிருந்ததைப் பார்த்தபோதும் அதன் அருகிலேயே போக்குவரத்துப் பணிமனை ஒன்று உருவாகி வருவதைக் கண்ட போதும் மகிழ்ச்சியாக இருந்தது. காந்தி மண்டபத்தின் எதிரில் பாழடைந்து கிடந்த பூங்காவை இப்போது நேசமணி போக்குவரத்துக் கழகம் தனது பொறுப்பில் அருமையாகப் பராமரித்து வரும் அழகையும் கண்டோம். இவற்றோடு, முன்பு விவேகானந்தர் பாறைக்குச் செல்வதற்காக விசைப் படகு டிக்கெட் வாங்குவதற்கு மக்கள் நீண்ட நேரம் வெயிலில்தான் நிற்க வேண்டும். இப்போது வரிசையில் நிற்பவர்களின் நிழல் வசதிக்காகச் சுமார் ஐந்து லட்சம் செலவில் நிழற்கூடம் அமைத்திருப்பதைக் கண்ட போதும் மகிழ்ச்சியாகவே இருந்தது.

ஆனாலும் கன்னியாகுமரியின் குடிநீர்ப் பஞ்சம் இன்னும் தலைவிரித்தாடும் நிலேதான். குளிப்பதற்குக் கூட ரேஷன் முறையில் தான் தண்ணீர் கிடைக்கிறது. காந்தி மண்டபத்தின் பராமரிப்பும் முன்பு போலவே மெத்தனமாகத்தான் இருக்கிறது. உடைந்து போன பாரத மாதாவின் சிலேகூட இன்னமும் புதுப்பிக்கப்படவில்லே என்பதெல்லாம் வருத்தமடையவே செய்தன.

இடையிடையாக, கன்னியாகுமரி மாவட்டக் கலெக்டர் முனீர் ஹோதாவைச் சந்தித்தோம். சென்ற விசிட்டின் போதும் இவரே தான் கலெக்டராக இருந்தார் என்பதால் நீண்ட நேரம் பேசினார். நாங்களும் எல்லா விஷயங்களையும் எடுத்துச் சொன்னோம். இதோ அவற்றின் சுருக்கம்:

''நாகர்கோவில் பஸ் நிலையப் பிரச்னை இன்னும் தீர்ந்தபாடில்லையே?''

''புதிய பஸ் நிலையம் கட்டுவதற்குச் சுமார் இரண்டு ஆண்டுகள் ஆகலாம். அதனால், தற்போதுள்ள பஸ் நிலையத்தில் ஏற்படும் இட நெருக்கடியைத் தவிர்க்க, எல்லாப் பேருந்துகளும் அந்த பஸ் நிலையத்தினுள் செல்லாமல், சிலவழித்தட பஸ்களை, ஹோசப் கான்வென்ட் அருகில் நிறுத்திப் பயணிகளை ஏற்றிச் செல்வதற்கு ஏற்பாடு செய்திருக்கிறோம். இதன் மூலம், பஸ் நிலையத்தில் ஏற்படும் இடநெருக்கடியையும் பயணிகளின் அசௌகரியத்தையும் தவிர்த்துள்ளோம்.''

''நாகர்கோவில் எஸ். பி. ஆபீஸ் அருகிலுள்ள ஹரிஜன் மாணவர் விடுதியின் பரிதாப நிலையைப் பற்றி விரிவாக எழுதியிருந்தோமே?''

''கல்கியில் நீங்கள் குறிப்பிட்டிருந்த குறைபாடுகளை நாங்கள் களைந்து விட்டோம். புதிய வார்டனைப் போட்டிருக்கிறோம். மாணவர்களுக்குரிய உணவுக்கான பணத்தையும் கூட்டியிருப்பதோடு, அவர்களுக்கு நல்ல சத்துள்ள உணவுகளை வழங்குகிறோம். அடிக்கடி 'ரெய்டு' நடத்தி விபசாரம் நடக்கா வண்ணம் பார்த்துக் கொள்கிறோம். தண்ணீர் வசதி, கழிப்பிட வசதிகளையும் செய்துள்ளோம். இவற்றை நீங்களே நேரில் சென்று பார்க்கலாம்.''

(கலெக்டர் சொன்னபடி மறுநாள், அந்த அரிஜன மாணவர் விடுதிக்குச் சென்று பார்த்தோம். பெரிதாக ஒரு சீரமைப்பும் செய்யப்படவில்லை!)

''கன்னியாகுமரியில் இன்னமும் தண்ணீர்ப் பிரச்னை உள்ளதே?''

''முடிந்தவரை, ஆழ் குழாய்களை அமைத்தும், திறந்தவெளிக் கிணறுகளைத் தோண்டியும், லாரி மூலம் தண்ணீர் வினியோகம் செய்தும் நிலைமையைச் சமாளித்து வருகிறோம். இதற்கு நிரந்தரமாக ஒரு தீர்வு காணவும் முயற்சி எடுத்து வருகிறோம்.''

''காந்தி மண்டபத்தின் மொசைக் தரையில் கால்களை வைத்தால் 'பிசுக் பிசுக்' கென்று ஒட்டுகிறது. அவ்வளவு அழுக்கு. மேலும், படிக்கட்டுகளில் எல்லாம் ஒரே காகிதமும், வாழைப் பழத் தோலும் வாழை இலையுமாக நிறைந்து கிடக்கின்றதே?''

''தினசரி ஆயிரக்கணக்கான பேர் வந்து போவதால், அழுக்குப் படியலாம். அதைத் தினசரி சுத்தம் செய்ய ஏற்பாடு செய்கிறேன்.''

''விவேகானந்தர் நினைவாலயத்திற்குச் செல்லும் படகுகள் பழுது பார்க்கவோ, ஒதுங்கி நிற்கவோ போதுமான இடவசதியில்லை! அப்பகுதி முழுக்க மீனவர்கள் தங்களுடைய கட்டுமரங்களையும், மோட்டார் படகுகளையும் நிறுத்தி வைத்திருக்கிறார்கள். படகுப் போக்குவரத்துக்குத் தனி 'போட் ஜெட்டி' அமைக்கலாமே?''

''அருகில் சின்ன முட்டம் 'மீன் பிடித் துறைமுகம்' வேலை நடந்து கொண்டிருக்கிறது. அது முடிந்ததும், மீன் பிடிக்கும் படகுகளை அங்கேயே நிறுத்துவார்கள். அதனால், விவேகானந்தர் நினைவாலயத்திற்குச் செல்லும் படகுப் போக்குவரத்துக்குப் போதிய இட வசதி கிடைக்கும் என்று நம்புகிறேன்.''



• காந்தி மண்டபத்தின் முன்னுள்ள பூங்கா: நல்ல பராமரிப்பு.

''கன்னியாகுமரியிலுள்ள லாட்ஜுகளில் எல்லாம் ஒரு குறிப்பிட்ட வாடகை இல்லை.. சீசனுக்கு, ஆட்களுக்குத் தகுந்தபடி வசூலிக்கிறார்களே?''

''அதைத் தடுக்க நடவடிக்கை எடுக்கிறேன். இப்போது மிக்க் குறைந்த வாடகையில், அரசே தங்கும் விடுதிகளைக் கட்ட முன் வந்துள்ளது. அப்போது சுற்றுலாப் பயணிகள் அதிக வாடகை கொடுத்து, லாட்ஜில் தங்க வேண்டிய அவசியமிருக்காது!''

''நாகர்கோவில் — குளச்சல் நெடுஞ்சாலையில் உள்ள மணவாளக்குறிச்சிப் பாலம் கடந்த நான்கு ஆண்டுகளாகக் கட்டி முடிக்கப்படவில்லையே...?''

''அப்பாலம் கட்டத் தொடங்கி வெறும் இரண்டரை ஆண்டுகள்தான் ஆகின்றன. எப்படியும் அடுத்த மண்டைக்காடு திருவிழாவிற்கு முன்பு முடிந்துவிடும்!''

''குளச்சல் துறைமுக அபிவிருத்தி அப்படியே கிடக்கின்றதே?''

''அப்படியொன்றுமில்லையே! இந்தாண்டு பட்ஜெட்டில் கூட, அதற்கென்று நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது. அந்தப் பணம் ஸேங்ஷன் ஆனதும் வேலையை ஆரம்பித்து விடுவார்கள்.''

''தோவாளையிலுள்ள அரசு மருத்துவமனையில் இரண்டு மருத்துவர்களுக்கு இடமிருந்தும் கடந்த ஐந்தாண்டு காலமாக ஒரேயொரு மருத்துவர்தான் இருக்கிறார் என்று குறிப்பிட்டிருந்தோம்...



• கலெக்டர் முனீர் ஹோதா.

"உடனே இன்னொரு மருத்துவரையும் நியமித்து விட்டோம்!"

"கீரிப்பாறை அரசு ரப்பர் கழகத்தில் நடைபெறும் ஊழல்கள் பற்றி மிக விரிவாக எழுதியிருந்தோமே...?"

"பழையவற்றுக்கு விசாரணை செய்ய அரசு உத்தரவிட்டுள்ளது. நானும் ரப்பர் போர்டில் ஒரு மெம்பர்தான். இனிமேல் அங்கு ஊழல் நடப்பதற்கு வாய்ப்பில்லை."

"பத்மனாபபுரம் அரசு மருத்துவமனையின் அவலத்திற்கு நீங்கள் எடுத்த நடவ



• கன்னியாகுமரி: இன்னும் தண்ணீர்ப் பிரச்னைதான்.

டிக்கை?"

"பத்மனாபபுரம், குளச்சல், குழித்துறை, தோவாளை நிலைமைகள் பற்றி அரசுக்கு எழுதியுள்ளோம். குழித்துறை அரசு ஆஸ்பத்திரிக்கு மூன்று லட்சம் ஒதுக்கீடு செய்யப்பட்டு அங்கு அபிவிருத்திப் பணிகள் நடைபெற்று வருகின்றன. பத்மனாபபுர அரசு மருத்துவமனையில் தமிழ்நாடு ஃபேமிலி பிளானிங் மற்றும் வெல்ஃபேர் நிறுவனம், ஒரு வெயிட்டிங் ஹால் கட்டிக் கொடுத்துள்ளது."

"தக்கலை மேல்நிலைப் பள்ளியில் பணி புரிந்து கடந்த '82 ஆம் ஆண்டு ஓய்வு பெற்ற கிருஷ்ணய்யர் என்பவருக்கு இன்னும் முழு வைப்பு நிதியும், ஓய்வூதியமும் கிடைக்கவில்லை என்பது பற்றிச் செய்தி வெளியிட்டிருந்தோமே?"

"அதற்குப் பிறகு அவருக்கு நாங்கள் ஒரு கடிதம் கூட எழுதினோம். ஆனால், அவர் என்னை வந்து பார்க்கவேயில்லை. இங்கு நேரடியாக வந்தால்தானே அவருக்கு உதவ முடியும்! காலந் தாழ்த்தாமல் அவரிடம் என்னை வந்துப் பார்க்கச் சொல்லுங்கள்."

"மணவாளக்குறிச்சிக்கு அருகில் சேர

• மணவாளக்குறிச்சி பாலம்: அடுத்த திருவிழாவுக்குள் முடியும்!



மங்கலத்திலுள்ள கொடித் தோட்டம் என்ற பகுதியில் வாழும் இருபத்தி மூன்று அரிஜனக் குடும்பங்களுக்கு நடைபாதையில்லாததைப் பற்றி எழுதியிருந்தோமே... உங்கள் நடவடிக்கை என்ன...?"

கலெக்டர் உடனே, ஆதிதிராவிடர் நலத்துறை அதிகாரியை அழைத்து அதுபற்றிக் கேட்டதும் அவர், "அனந்தாசி நாடார் என்பவர் ஐந்து செண்ட் இடத்திற்காக ஹைகோர்ட்டில் ஸ்டே ஆர்டர் வாங்கியிருக்கிறார்!" என்றதும், கலெக்டர், "வெறும் ஐந்து செண்ட் நிலத்திற்காக ஹைகோர்ட் வரை செல்லணுமா? அடுத்த திங்கட்கிழமை, மக்கள் மன்றக் கூட்டத்தில் அவரை அழைத்து, இதுபற்றிப் பேசி, இப்பிரச்னைக்கு ஒரு முடிவு செய்யுங்கள்! இன்னும் இதை இப்படியே நீள விட வேண்டாம்!" என்றார்.

ஆகமொத்தம் கூட்டிக் கழித்துப் பார்க்கும் போது, கன்னியாகுமரி மாவட்டத்தைப் பொறுத்தவரை, சில பிரச்னைகளுக்கு இன்னமும் தீர்வு காணப்படவில்லை என்பது உண்மைதான். எனினும் மாவட்டக் கலெக்டரும் மற்ற அதிகாரிகளும் தங்களால் ஆனதைச் செய்து கொண்டுதான் இருக்கிறார்கள் என்பது மகிழ்ச்சிக்குரிய விஷயமே!

— பானு மணாளன்

படங்கள்: மனோ; பி. எம்.



# இனி ஒரு சுதந்திரம்

**பா**ரத சுதந்திரத்திற்காக காந்திய வழியில் போராடி, அதில் காலில் அடிபட்டு, இன்றைக்குத் தியாகி என்ற மரியாதையோடு ஊரில் உலா வரும் சிவகுமாரின் பஞ்சடைந்த பார்வை வழியே கதை சொல்லப்பட்டிருக்கிறது.

அரசாங்கம் அபகரித்துக் கொண்ட நிலத்திற்குக் காம்பன்சேஷன் கேட்டு, ரப்பர் செருப்புகள் தேய அவர் அலையும்போது பரிதாபமாயிருக்கிறது. காரியம் நடப்பதற்காக அவர் லஞ்சம் கொடுக்கும்போது, ஐயோ இந்தக் காட்சியைத் தவிர்த்திருக்கலாமே என்று பதற்றம் வருகிறது. மகள் திருட்டுத் தாலியும், வயிற்றில் கருவுமாக, 'அப்பா என்ன ஊத்தட்டும் — சாம்பாரா, ரசமா?' என்று கேட்டதும் வறுமை தோய்ந்த வட்டக் கண்ணாடி வழியே ஏறிட்டு, 'கொஞ்சம் விஷத்தை ஊத்து' என்று பொருமும்போது, அடி வயிற்றில் சிலீர் என்கிறது. அப்புறம் க்ளைமாக்ஸில் — அதைச் சொல்லிவிட்டால் தப்பு — அவர் எடுக்கும் திடீர் முடிவு, 'கொடுய்யா கையை' என்று கேட்டு வாங்கிக் கண்களில் ஒற்றிக்கொள்ளச் சொல்கிறது. சிவகுமாரின் கிரீடத்தில் இது ஒரு தங்கச் சிறகு.

சந்திரசேகர் — நளினி — அவர்களது மூன்று மகன்கள் — அது ஒரு தனிக் கிளை நதி. அடமானம் வைத்த நிலத்தை மீட்டு அங்கே விளைச்சலுக்கு வியர்வையால் பாசனம் செய்து வரும் அந்தக் குடும்பத்தின் மீது, ஆரம்பத்திலேயே ஒரு பாசம் வந்துவிடுகிறது. அநியாயப் பணக்காரன் அந்த நிலத்தை மறுபடி அடமானம் பிடிக்கக் கீழ் நிலத்தில் பம்ப் செட் போட்டுவிட, பாறைகள் நிறைந்த இடத்தில் பல்லைக் கடித்துக்கொண்டு கிணறு தோண்டுகிறார். பாறைகளைத் தகர்க்க அவர் வைத்த வெடி வெடிக்காமல் போய்விட, என்ன ஆயிற்று என்று பார்க்க அவர் கிணற்றுக்குள் அடி அடியாய் இறங்கும்போது, சீட்டை விட்டு எழுந்து நிற்கிற அளவுக்கு டென்ஷனை விண்ணென்று அந்தக் காட்சியில் இழுத்துப் பிடித்திருக்கிறார்கள். சப்பாஷ்!

விஜு சக்ரவர்த்தி இருக்கிறாரே, அவர்தான் ஊரின் 'பெரிய' மனிதர். பாக்கெட் நிறையப் பொய்களும், அக்கிரமமுமாக நிரப்பி வைத்திருப்பவர். ஜனகராஜ் நிலத்தை மீட்க வரும் ஒவ்வொரு முறையும் சிரிப்புக் குறையாமல், வட்டி கூடி விட்டதே என்று திருப்பி அனுப்புகிற கல்லுளிமங்கன். அவருக்கு லஞ்சம் கொடுத்து அவரால் புரமோஷன்களை அனுபவித்து இன்றைக்குக் கலெக்டராகிவிட்டவனை மாப்பிள்ளையாக்கிக் கொள்ள அவர் சொல்லும் ஒரே காரணம்: 'நீ பொழைக்கத் தெரிஞ்சவன்யா.'

பொழைக்கத் தெரிஞ்சவனாக வரும் ராஜா அமர்க்களமான டிரெஸ்களில் அழகு பொம்மை. முகத்தில் ஏதோ ஒரு நிரந்தர அமைப்பில் எப்போதும் புன்னகை ததும்புகிறது. சற்று கர்ட்டமான காட்சிகளில் அந்தப் புன்னகை குறுக்கில் எதிரியாக வந்துவிடுவது பரிதாபம். க்ளைமாக்ஸ் மட்டும் விதிவிலக்கு.

மணிவண்ணன் சார்,

இத்தனை கேரக்டர்களையும் தனித் தனி நூலில் கட்டிச் சிக்கலில்லாமல் சாதுர்யமாக பொம்மலாட்டம் காட்டியிருக்கிறீர்கள். வசனங்களில் மிளகாய்ப் பொடியைத் தூவிச் சமுதாய அவலங்களைச் சொடுக்கித் தெளித்திருக்கிறீர்கள். காட்சியமைப்புகளில் கவனம் செலுத்தி, தொய்வில்லாமல் படத்தை நகர்த்தியிருக்கிறீர்கள். ஆனால் உங்களிடம் ஒரே ஒரு கேள்வி:

தியாகி சத்யமூர்த்தி ஊரில் நடக்கும் அநியாயங்களைப் பெருமூச்சுகளோடு பார்த்து சகித்துக் கொள்கிறாரே தவிர, தட்டிக் கேட்கப் புறப்படுவதில்லை. தம் குடும்பத்திலேயே சிக்கல் விழுந்த பின் தான் ஆத்திரமும், ஆவேசமும் அவரிடம் கொப்புளிக்கின்றன. தம் நாற்பது வருட அஹிம்சா தர்மத்தையே கூட தூக்கி எறிகிறார். இந்தச் சுயநலம் அவரைக் கேவலப்படுத்தவில்லை?

ஒன்று சொல்ல மறந்துவிட்டோமே, அந்தப் போலீஸ் கான்ஸ்டபிள் சத்யராஜ். தியாகியை அடிப்பதைப் பார்த்துவிட்டுக் குமுறி, தொப்பியைக் கழற்றி விட்டு வெறும் கையாலேயே ஐ.பி.எஸ். அதிகாரி முதற்கொண்டு அத்தனை பேரையும் சகட்டுமேனிக்கு வெளுத்துக் கட்டுகிறாரே — மின்னல்தான்!

— ஜெயமன்மதன்




# கல்கி

1987 ஜூன் 28
மலர் 45 இதழ் 48
பிரபவ ஆனி 14




## கடன்பட்டார் நெஞ்சு களிப்படைய முடியுமா?

அமைதியாக ஆனால் சிறப்பாக, நிதானமாக ஆனால் திறமையாக முன்னேறி, அண்மையில் நூற்றாண்டு கொண்டாடியது நுங்கம்பாக்கம் சாசுவத தன ரக்ஷக நிதி. விழாவில் பங்கேற்க வந்த சி. சுப்பிரமணியம் இந்த நிதி நிறுவனம் கட்டு மீறி வளர்ந்து விடாமல் அடக்கமாக இருப்பதைப் பாராட்டினார். ஊதப்படும் பலூன் போலக் குறுகிய காலத்தில் ஏற்படும் அளவுக்கு மீறிய வளர்ச்சியே சில சமயங்களில் ஆபத்தாகவும் முடிவதுண்டு என்று உணர்த்தி எச்சரித்தார்.

சதா தேச நலனைக் கருத்தில் கொண்டிருக்கும் சீரிய சிந்தனையாளர் சி. எஸ்., கட்சிக் கண்ணோட்டமின்றி எதையும் யதார்த்த நோக்கில் பார்த்து வழிகாட்டுகிறவர். எனவே, ஒரு நிதி நிறுவனத்தின் விழாவில் பங்கேற்க வந்த அவர், நாட்டின் நிதி நிலைமை பற்றிக் கவலையுடன் பேசியதில் வியப்பில்லை. குறிப்பாக, லோன் மேளாக்கள் என்று கூறிக் கொண்டு, அரசுடைமையான வங்கிகள் பணத்தை வாரி இறைப்பதை அன்று அவர் வன்மையாகக் கண்டித்தார். 'லோன் மேளாக்களில் விநியோகிக்கப்படும் பணத்தைத் திருப்பித் தரவேண்டும் என்ற எண்ணமே உருவாக்கப்படுவதில்லை; காகித நோட்டுக்களைச் செல்வம் என்று நினைக்கச் செய்து மக்களை ஏமாற்றும் போக்கு கண்டனத்துக்குரியது; பணப் புழக்கத்தை அதிகரிப்பதால் பொருளாதாரச் செழிப்பை உண்டாக்கவே முடியாது' என்றெல்லாம் நிதர்சன உண்மைகளை எடுத்துக் கூறினார் சி. எஸ்.

வங்கிகள் அரசுடைமையான போதே அவற்றின் நிதி வசதிகளைக் கட்சி வளர்ச்சிக்குப் பயன்படுத்தும் போக்கு தொடங்கி விட்டது. கடன் மேளாக்களை அரசுச் செலவிலும் வங்கிகள் செலவிலும் நடத்தி, அதன் மூலம் காங்கிரஸ் கட்சிக்குப் புகழும் பிராபல்யமும் தேடுகிற முயற்சி வெட்கமின்றித் தொடர்கிறது. காங்கிரஸ் கட்சிக்காரர்கள் மூலமாக, அவர்களின் சிபாரிசுடன் கடன்கள் வழங்கப்படுகின்றன. இதன் மூலம், இந்திரா காந்தியோ அல்லது ராஜீவ் காந்தியோதான் தங்களுக்குப் பணம் தந்ததாக ஒரு மாயையில் மக்கள் ஆழ்ந்து போகின்றனர். பாங்கு அதிகாரிகளுக்குக் கடனைத் திருப்பி வசூலிக்கும் எண்ணம் இருந்தாலும், 'இந்திரா கொடுத்தாங்க; நீங்க ஏன் திருப்பிக் கேட்கிறீங்க?' என்று பாமர மக்கள் அறியாமையால் பேசும்போது அதிகாரிகள் மனம் சோர்ந்து போகிறார்கள். போதாக் குறைக்கு, 'எவ்வளவு கடனைத் திரும்ப வசூலித்தீர்கள்?' என்று அரசு, வங்கி அதிகாரிகளைத் தட்டிக் கேட்பதே இல்லை! 'எவ்வளவு கடன் விநியோகித்தீர்கள்?' என்றுதான் அழுத்துக் கேட்கிறது! இடைத் தரகர்களாகச் செயல்படும் காங்கிரஸ்காரர்கள், கமிஷன் கழித்துக் கொள்கிறார்கள். 'கடனைத் திருப்பித் தரவேண்டியதில்லை' என்ற உணர்வையும் மக்களிடம் வளர்க்கிறார்கள்.

உண்மையில், திருப்பித் தரவேண்டும் என்ற எண்ணம் இருந்தால் கூட ஏழை விவசாயி அல்லது தொழிலாளியால் முடியாது. காரணம், அவர்கள் திட்டமிட்டுக் கேட்கிற தொகை தரப்படுவதில்லை. தரகு, கமிஷனெல்லாம் போகக் கிடைக்கும் தொகை, அவர்கள் திட்டத்தை லாபகரமாக நடத்தி வெற்றிபெறப் போதுமானதாக இருப்பதில்லை. ஆக, வட்டியும் அசலுமாகத் திருப்பித் தருவது எப்படி?

அரசுடைமையான வங்கிகளில் உள்ள பணம் மக்களின் பணம். மக்களின் பணம் தான் மக்களுக்கு விநியோகமாகிறதே தவிர, காங்கிரஸின் பணமோ காங்கிரஸ் தலைவர்களின் சொந்தப் பணமோ அல்ல. இது தெரியாமல் மக்கள் ஏமாந்து போவது மட்டுமல்ல; நோட்டுப் புழக்கம் அதிகமாகி, பணவீக்கமும் விலைவாசியும் உயர்வதால் இதே பாமர மக்கள்தான் மீண்டும் பாதிக்கப்பட்டுத் துன்பத்தில் ஆழ்ந்து போகிறார்கள். பிரதமரோ, பூஜாரியோ அல்ல.

ஏழைகள் தொழில் நடத்தக் கடன் தந்து, அவர்கள் நிலையை உயர்த்த உதவக் கூடாது என்பதல்ல. பத்துக் கிராமங்களுக்கு ஒரு வங்கிக் கிளை தோன்றட்டும். கடன் தரட்டும். ஆனால் கடன் தருவதும் திரும்பப் பெறுவதும் வங்கி அதிகாரியின் பொறுப்பில் இருக்க வேண்டும். முழுக்க முழுக்கப் பொருளாதார அடிப்படையில் அவர் இயங்க வேண்டும்; அரசியல் நோக்கில் அல்ல. ஒருவேளை அந்த அதிகாரி சரியாக இயங்கவில்லையெனில் கிராம மக்களே அந்த வங்கிக் கிளையைப் புறக்கணிப்பதன் மூலம் பாடம் கற்பிப்பார்கள்.

கடன்பட்டார் நெஞ்சம் கலங்கத்தான் வேண்டும்; அதைக் களிப்படையச் செய்யலாம் என்று இ. காங்கிரஸ் தலைவர்கள் கருதினால், நம் மூதாதையருக்குத் தெரிந்த அடிப்படைப் பொருளாதார உண்மை கூட இவர்களுக்குத் தெரியவில்லை என்பதே அர்த்தம்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.




# உண்மையில் ஆண்கள்தான் பிரச்னை!

* "கடற்படையை அனுப்புங்கள்" — அருமையான, அறிவார்த்தமான தலையங்கம். அதன் கடைசி வரிகள் அனைவரையும் சிந்திக்க வைக்கக் கூடியவை.

'சொந்தச் சகோத ரர்கள்
துன்பத்தில் சாதல் கண்டும்
சிந்தை இரங்கா ரடீ! — கிளியே!
செம்மை மறந்தா ரடீ!'

என்ற மகாகவி பாரதியின் வரிகள்தாம் நினைவுக்கு வருகின்றன.

ஸ்ரீமுஷ்ணம், எஸ். சிவசங்கர்.

* தலையங்கம்கருத்தாழமிக்கதாகஇருந்தது. இழுத்துக் கொண்டே செல்லும் இலங்கைத் தமிழர் பிரச்னையைப் பற்றி, பல கோணங்களிலிருந்தும் எடுத்துச் சொல்லியிருந்த விதம் பிரமாதம்!

சென்னை — 11, ஜி. குமார்.

* இவ்வாரத் தலையங்கத்தைத் தன்மானமுள்ள எந்தத் தமிழன் படித்தாலும், அவனால் சும்மா இருக்க முடியாது. தமிழர்களின், உள் உணர்ச்சிகளுக்கு உருவம் கொடுத்தது போலிருந்தது!

குத்தாலம், எஸ். ராஜா.

* ஏற்றுக் கொண்ட பதவியினால் மக்களுக்குச் செய்யப்பட்ட சேவையின் காரணமாகவே ஒருவரைப் பிறர் மதிக்க முடியும். அந்த வகையில், எங்கள் மாவட்டத்தின் முன்னாள் ஆட்சியாளர் அபுல் ஹசன், மரியாதையையும் மதிப்பையும் பெற்று விட்டார்.

பொள்ளாச்சி, பொன். ஆறு.

* விசுவின் கவர், பேட்டி ஒரு தன்னடக்கமுள்ள கலைஞரின் வாக்கு மூலமாய் அமைந்திருந்தது. பாராட்டுக்கள்.

ஈரோடு — 1, ரேவதி ப்ரியன்.

* சமீபத்திய திரைப்படங்கள் மூன்றிலும் ஆட்டுக்கடா மீசையுடன் நடித்து அமர்க்களப்படுத்திய விசுவா இப்படி அட்டையில் அரும்பு மீசையுடன்...?! நம்பவே முடியவில்லை சார்!

கச்சநகரம், எம். ரவீந்திரன்.

* கேள்விகள், விசுவைத் திக்குமுக்காட வைத்து விட்டன. விசுவின் கருத்துக்கள் பலவற்றை என்னால் ஒத்துக் கொள்ள மட்டுமல்ல, ஜீரணிக்கவும் முடியவில்லை.

திருநெல்விக்காவல், டி. திருக்குறள்செல்வன்.

* முதல் பக்கத்திலேயே பிரச்னைகளுக்குக் காரணம் 'பெண்கள்தான்' என்று விசு அவர்கள் ஆணித்தரமாய்க் கூறியிருப்பது மறுப்புக்குரியது. பிரச்னை பெண்களினால் வருவதா? அல்லது பெண்களுக்குப் பிரச்னை கொடுப்பது ஆண்களுக்கு வழக்கமாகிவிட்டதா? என்பதை அவர் அலசிப் பார்க்கட்டும். குடும்பத்தில் ஏற்படும் குழப்பங்களை — சிறுசிறு பிரச்னைகளை — விட்டுக் கொடுக்கும் இயல்பு படைத்த பெண்களே சமாளிக்கிறார்கள் என்பது புரியும். தன்னால் எதையுமே விட்டுக் கொடுக்க முடியாது என்று பெண்ணை அடிமைப்படுத்தும் ஆண்தான் உண்மையில் பிரச்னை!

சென்னை — 5, செல்வி இ. ருக்மணி.

* உபதேசம் ஊருக்கு மட்டுமே என்ற கொள்கையுடையவர்களின் நெஞ்சில் ஊசியாய்த் தைக்கும் விதத்தில் அமைந்திருந்தது வினோதானந்தின் 'மறு ஒலிபரப்பு' சிறுகதை.

சென்னை — 15, சைதை வி. முரளி.

* மனிதனோடு நேசம் கொண்டு, உறவு கொண்டு, வாழும் ஒரு குதிரை, அம்மனிதனின் இறப்புக்குப் பின் எப்படி வாழும்; அதன் உறவு நிலை என்ன? இப்படியெல்லாம் நம் மனத்தில் ஒரு சமுதாயப் பிரக்ஞையை உருவாக்க முயற்சி செய்யும் 'பிரபஞ்சனின்' சிறுகதை உன்னதமாயிருக்கிறது. அதை யோசிக்கையில் இதயம் சிறிது வலியை உள்வாங்குகிறது.

விருத்தாசலம், இரா. துரையப்பன்.

* வாரம் ஒரு படம் எடுத்துத் தள்ளிக் கொண்டிருக்கும் ஒரு சில இயக்குனர்களின் மத்தியில், தனது முந்தைய படத்தில் ஏதோ தவறு நேர்ந்து விட்டதாகவும் அதைக் கண்டுபிடிப்பதிலேயே ஆறு வருடங்கள் செலவாகி விட்டதாகவும் கிரீஷ் காசரவள்ளி கூறியிருந்ததைப் படித்தபோது, உண்மையிலேயே ஆச்சரியப்பட்டுப் போனேன்.

அரூர், மு. மதிவாணன்.

* "சரண்சிங் மறைவு குறித்த கேள்விக்கான பதிலைக் கண்டேன். மிக எளிமையான முறையில் லஞ்ச ஊழல்களை ஒழிக்கப் பாடுபட்டார்" எனப் படித்தவுடன், கண்ணாடிக் கற்களுக்கிடையில் இப்படி ஒரு வைரக் கல்லா என அதிசயித்துக் கண்ணீர் அஞ்சலி செலுத்தினேன்!

விருத்தாசலம் — 1, சௌமியன்.

* கண் கண்ட தெய்வங்களின் திருவுருவப் படங்களைக் கல்கியில் கண்டோம். காணக் கண்கள் கோடி வேண்டும். மிக்க மகிழ்ச்சி!

சென்னை — 5, ஏ. எஸ். சூரி.

* பெரியவர்களின் ஜெயந்தியை முன்னிட்டு அவரை நேரிலேயே தரிசிக்கக் கிளம்பிய தினம், எதிர்பாராத காரணத்தினால் அவரைத் தரிசிக்க முடியாமல் போய் விட்டது. அந்தக் குறையைக் கல்கி நிவர்த்தி செய்து விட்டது!

சென்னை — 88, ஜி. ராஜேஸ்வரி.



# பூவே இளம்... பூவே

நதியா அவருக்குண்டான உடைகளை அவரே தேர்ந்தெடுத்துக் கொள்கிறார் என்கிற செய்தியில் அர்த்தம் இருக்கிறது. விதவிதமான உடைகள். அத்தனையிலும் தலையணைக்கு உறை போலக் கச்சிதமாகப் பொருந்துகிறார். ஆனால் ஃபாஷன் பரேட் நடத்துவதற்காகவா நதியா இந்தப் படத்தில் நடிக்க ஒப்புக் கொண்டார்? பாத்திரத்தில் ஒன்றும் பளிச்சிடக் காணோம்.

அதுதான் எலியும், பூனையுமாக இருக்கிறார்களே நதியாவும், சுரேஷும் அப்புறம் எப்படிக் காதல் வந்தது? காதல் வந்ததற்காகச் சொல்லப் படுகிற சாக்கில் கொஞ்சமாவது அழுத்தம் வேண்டாம்?

மலை ஜாதி மக்கள் நடனமாட, அவர்கள் மத்தியில் போய் நதியாவும், சுரேஷும் ஒளிந்து கொண்டே நடனமாடுவதும் கடைசியில் தப்பிப்பதும் ஆயிரம் வருடங்களாகச் சினிமாவில் காட்டப்படும் டெக்னிக். இந்தப் படத்திலுமா? ஐயோ!

ஓர் ஏழை வாலிபன். ஒரு பணக்கார வாலிபி. முதலில் மோதல். அப்புறம் காதல். அப்புறம் பணக்காரத் தந்தைக்கும் ஏழைத் தந்தைக்கும் இடையே மனக்கசப்பு. காதலர்கள் ஓடிப் போதல். கடைசியில் காதலர்கள் ஒன்று சேர்தல். அடடே. அந்த நாள் பாபி கதையை எடுத்து உதறி, தூசெல்லாம் நீக்கி புது வர்ணம் அடித்துவிட்டார்கள் போலிருக்கிறதே!

இலங்கைத் தமிழர் செந்திலும் இந்தியத் தமிழர் எஸ்.எஸ். சந்திரனும் படம் முழுக்க ஒரே பெண்ணுக்காக டக் ஆஃப் வார் நடத்துவதில் ஏதோ அங்கங்கே சிரிக்கலாம் — லேசாக.

அட ராதாரவி. படத்திற்குச் சரியான வில்லன் தான்! இல்லையே. வில்லன் பாத்திரத்திலிருந்து நல்லவன் பாத்திரத்திற்குத் தாவுகிறாரே. வில்லன் ரோலிலேயே நன்றாக இருந்தார், இல்லை? ராதாரவிக்காக என்றே இரண்டு ஸ்டன்ட் ஸீன்கள். சின்னப் பையன்கள் குவித்து வைத்த மணல் போர் மீது சண்டை போடுகிற மாதிரி.

டைச்சரம்மாக மித்ராவுக்கு ஜுரம். ராப்பகலாக அவரை நதியா கவனித்துக் கொள்கிறார், மருந்து கொடுத்து, மாத்திரை கொடுத்து. ஆனால் அந்தக் காட்சிதான் மனத்தில் கொஞ்சம் கூட ஒட்டவேயில்லை. படத்தில் ஏறக்குறைய எல்லாக் காட்சிகளும் நுனிப்புல் மேயல்தான்.

கொல்லன் பட்டறை விநு சக்ரவர்த்தி பரவாயில்லை. அந்தச் சிவந்த கண்களுடனும் ஓங்கிய கத்தியுடனும் மனிதர் பார்ப்பதற்குத்தான் கரடு முரடு. ஆனால் நெஞ்சு நிறைய ஈரம். அடிப்பேன், உதைப்பேன் என்று பையனை ஒரு பக்கம் மிரட்டிவிட்டு, இன்னொரு பக்கம் 'அவனுக்குப் பிடித்ததை வாங்கி வந்திருக்கிறேன் சாப்பிடச் சொல்லு' என்று மனைவியிடம் சொல்லிவிட்டு நகர்வதென்ன?

இன்னொரு புது இசையமைப்பாளர் போலிருக்கிறது.

**தியேட்டரை விட்டு வெளியே வரும்போது நேற்றே வந்து உட்கார்ந்து விட்டோமோ என்று சந்தேகம் எழுகிறது. சூடா ஒரு காப்பி கொடுப்பா. தூக்கமாவது கலையும்!**

— ஜெயமன்மதன்

# நிழல் யுத்தம்

## —12—

உங்களுக்குப் பிடித்தது என்ன? உங்களுக்கு உசிரான விஷயம் எது?

பிடித்ததும் பிடிக்காததும் மாறிக் கொண்டேயிருக்கிறது. பிடிக்காததுகூட, சில நிரந்தரமாகியிருக்கின்றன. பிடித்தவை என்று நினைத்தவை மட்டும் சுழன்று விழ்ந்து கொண்டேயிருக்கின்றன. புதிது புதிதாய் முளைத்துக் கொண்டேயிருக்கின்றன.

சின்ன வயதில் சிகரெட் மிட்டாய் பிடிக்கும். ஃபில்டர் சிகரெட் போன்ற உருவத்தில் தித்திப்பும், காரமுமாய் ஒரு மிட்டாய் வாங்கி, வாய் நுனியில் வைத்துக் கொள்ள வேண்டும் என்று ரொம்ப ஆசைப்பட்டிருக்கிறேன்.

''சூட்டக் காச்சி இழுத்துடுவேன் படவா. என்ன கெட்ட காரியம் இது?'' அம்மாவுக்குத் தெரியாமல் வாங்கிய முழு மிட்டாயைத் தெரிகிறபோது பிடுங்கி உடைத்துச் சாக்கடையில் போட்டு விட்டாள். அதைப் பார்க்கிறபோதெல்லாம் வாங்கலாமா? என்கிற ஆசை வரும். அம்மா பார்த்து விட்டால்...! என்ற பயமும் வரும். எஸ்.எஸ்.எல். சி. படிக்கிற போது, இந்த எட்டாவது படிவ ஆசை உதிர்ந்து விட்டது.

வில் மாதிரி வளைந்த ரேஸ் சைக்கிள் ஆசை வந்தது. ரிங்கோ என்று அடிக்கும் ஸ்பிரிங் பெல் போட்ட சைக்கிளில் காற்றாய்ப் பறக்க விருப்பம் எழுந்தது. அம்மா மார்வாடிக் கடையில் எவரோ அடமானம் வைத்து முழுகிப் போன உயரச் சைக்கிள் வாங்கிக் கொடுத்தாள். கல்லூரிக்குப் போனபோது, இந்த சைக்கிள் ஆசை உதிர்ந்து போயிற்று. கழுத்துச் செயின் ஆசை வந்தது. ''எத்தனையோ சாமான் உபயோகமா வாங்க வேண்டியிருக்கிறது. செயினுக்கு ஆசைப்படுவாளா? எவனாவது அடிச்சுப் பிடுங்கிண்டு போய்டுவான். மாமனாராத்தல போடுவா, அப்போ போட்டுப் பார்த்துக்கோ'' என்று மறுதலிக்கப்பட, செயினும் சுழன்றது. பிடித்தது ஏதும் பிடிக்கிற போது கிடைத்ததில்லை. பிடிப்பற்ற போது எதிர்ப்பட்டிருக்கிறது. இப்படிக் காலம் தாழ்த்தி வந்தகளுக்களால் பிடித்தது என்பதே இல்லாது போயிற்று.

ஆசை ஏக்கம் வளர்க்கும். ஏக்கம் சோர்வு தரும். சோர்வு ஆசைக்கு எதிர்மறையான விஷயம் என்கிறது. படிக்க ஆசைப்படாமல், எதன் மீதும் பிடிப்பு இல்லாமல் இத்தனை வருடம் வளர்ந்தாயிற்று.

**பாலகுமாரன்**

தின்பண்டம், கலை, இலக்கியம், உடை, உபயோகிக்கும் பொருள், எல்லாமும் கிடைத்தபோது ஏற்றுக் கொள்கிற நிலை தான் இருந்திருக்கிறது. வறுமை ஆட்சி செய்கிற இடத்தில், வரி கட்டவே உழைக்கிற தருணத்தில், வசதி பற்றி யோசிக்க முடியவில்லை. ரசிக்க ஏதுமில்லை. ரசிப்பு இல்லாத போது பிடிப்பும் இல்லை.

எனக்கு என்ன பிடிக்கும். இப்போது என்ன பிடித்த விஷயம்?

இரண்டாயிரத்து ஐந்நூறு சம்பளம் தரும் உத்தியோகம் பிடித்திருக்கிறது. இந்த உசரம் வந்தது பிரமிப்பாய் இருக்கிறது. இந்த வளர்ச்சிக்கு மெல்ல மெல்லத் தள்ளிக் கொண்டு வந்த் அம்மாவைப் பிடித்திருக்கிறது. ஓடாய் உழைத்துத் தேய்ந்த தாயார் தான் உசத்தி என்று தோன்றுகிறது.

''என்ன பதிலே இல்லை, உங்களுக்குப் பிடிச்சது சொல்றதுக்கு இத்தனை யோசிக்கணுமா?''

''எனக்குப் பிடிக்கிற விஷயம் என் அம்மா தான் லலிதா.''

அம்மாவை யாருக்குத்தான் பிடிக்காது? எல்லோருக்கும்தான் பிடிக்கும். ஆனா...

''என் அம்மாவைத் தவிர, பிடிக்கிற விஷயம் இப்போதைக்கு நீதான்.''

''ச்சீய்.''

''உண்மையா, இதுதான்.''

''நான் அதைக் கேட்கல முரளி, மியூசிக்... ஆர்ட்ன்னு ஏதாவது?''



''லலிதா, நான் ரொம்பச் சிரமப்பட்டு வளர்ந்தவன். வறுமையை அனுபவிச்சவன். சாப்பாட்டுக்கே கஷ்டப்பட்டவன்.''

''அப்பா சொன்னு.''

''அப்படிப்பட்ட வாழ்க்கைல பிடிச்சது துன்னு சொல்ற நிலைமை எனக்கு ஏற்படல.''

''வறுமைக்கும், ரசனைக்கும் என்ன சம்பந்தம் முரளி.''

''உண்டு லலிதா. பணம், உணவு சிரமமான வாழ்க்கைல கலைகள் பெரிசாப் படாது.''

''பரமதரித்திரன் சங்கீதம் ரசிக்க மாட்டான்னு சொல்றேளா...?''

''தன் தரித்திரம் பத்திக் கவலைப்படாதவன் ரசனைக்குப் போயிருப்பான். நான் கவலைப்பட்டவன் லலிதா. இப்படி ஏழையாவே கடைசி வரைக்கும் இருந்துடுவோமோன்னு கவலைப்பட்டவன். ஏழையா சாகக் கூடாதுன்னு கங்கணம் கட்டிண்டவன். நிறையச் சம்பாதிக்கிறதே கனு, லட்சியம் எல்லாமா ஆயிடுத்து. நிறையச் சம்பாதிக்க நல்லாப் படிக்கணும்னு சொல்லிக் கொடுத்தாங்க. படிப்பு, படிப்பு, படிப்புதான். ஆசைப் பட்டுப் படிக்கலே பணம் சம்பாதிக்கப் படிச்ச படிப்பு.''

''ப்பா, சிரமம்தான்.''

''அதனாலதான் சொல்றேன், பிடிச்ச விஷயம் எதுவும் இல்லே. அம்மாவைத் தவிர.''

லலிதா கடலைப் பார்த்துக் கொண்டிருந்தாள். முரளி லலிதாவின் குழல் அசைவைக் கவனித்துக் கொண்டிருந்தான்.

''ஏன் ஒண்ணும் பேசலே?'' முரளி கேட்டான்.

''ஒண்ணு தோணறது.''

''சொல்லு!''

''மனுஷாளை ரொம்ப நேசிக்கக் கூடாது முரளி.''

''ஏன்?''

''பிரச்னை வரும்.''

''புரியலே.''

''ஒரு டிஸ்டன்ஸ் வச்சுக்கணும்.''

''எதுக்கு?''

''நேசிக்கிறவாளுடைய தனிமை கெட்டுப் போகும்.''





"மைக் டெஸ்ட் பண்றவர் திரும்பத் திரும்ப, 'ஒன்–டு–த்ரீ'ன்னு சொல்றாரே, ஏன்?"

"வேற ஒண்ணுமில்லே; கூட்டத்துக்கு வந்திருக்கிறவங்களை எண்ணிப் பார்க்கிறார்..."

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா

"எங்க கட்சித் தலைவர் உண்ணாவிரதம் இருந்தாருன்னு... ஒரே ஒரு பழம் சாப்பிடுவாரு!"

"ஆச்சரியமா இருக்கே... என்ன பழம்?"

"பலாப்பழம்தான்!"

— குத்தாலம் அபிதா



"புரியலே."

"முழுக்க முழுக்க மனுஷாளை நேசிக்கறது முடியாதுன்னு நினைக்கிறேன். முழு நேசிப்புக்குக் கலே, இலக்கியம், இருக்கு. சாவே இல்லாத விஷயங்கள் இதெல்லாம். இரண்டாயிரம், மூவாயிரம் வருஷம் ஆயுசு இருக்கிற விஷயம்; மரணமில்லாத விஷயம். நேசிக்கிற மனுஷாளுக்கு மரணம் வரலாம். ஸாரி, ஒரு ஆர்க்யுமென்ட்டுக்குச் சொல்றேன்; பிரிவு வரலாம்; பிணக்கு வரலாம்."

"புருஷன், பொண்டாட்டிக்கு நடுவுல கூடயா... அம்மா புள்ளைக்கு இடைல கூடயா?"

"வொய் நாட். வரலாம். உறவுங்கறதே எப்ப வேணாப் புரியும். பிரியத் தயாரா இருக்கணும். பிரிவைத் தாங்கத் தெரியணும்."

"உங்கப்பாவை...!"

"எனக்குப் பிடிக்கும். ஆனா அப்பாவை விட மியூசிக் பெரிசு. அப்பா இதம், மியூசிக் உயிர். அப்பா சிநேகிதம். சங்கீதம் ஆன்மா. நான் உங்களை எது பிடிக்கும்னு கேட்டது இந்த அர்த்தத்திலதான்."

"மனுஷாளுக்குத்தானே மியூசிக். மனுஷாளை வெறுத்துட்டு..."

"வெறுக்கச் சொல்லலே. யாரையும் வெறுக்க வேண்டிய அவசியமும் இல்லே. நேசிப்புக்கு வரைமுறை வேணும். முழுக்க நேசிக்கற விஷயமா மனுஷா இருந்தாச் சிரமம்."

"கடவுளே!"

"இது நெஜம்."

"நாளை உனக்குக் குழந்தைகள் பிறந்தா, குழந்தையை விட மியூசிக் பெரிசாகுமா லலிதா?"

குழந்தை, குழந்தையா இருக்கற வரைக்கும் அதுவே சங்கீதமா இருக்கும். அவனுக்குச் சிறகு முளைச்சுப் போச்சுன்னா, அவன் சங்கீதத்தை அவன் தேடிண்டு போயிடுவான்... ஸோ, என் பியானோதான் எனக்கு உயிர். குழந்தை பிடிக்கும்."

"அப்படி எங்கிட்ட ஒண்ணுமேயில்லே லலிதா."

"வளர்த்துக்கணும்."

"பியானோ நாலெட்ஜயா?"

"ஏதாவது. இதுமாதிரி ஏதாவது?"

"மனுஷாளையே ம்யூசிக்கா, கலேயா, இலக்கியமாப் பார்க்க ஆரம்பிக்கட்டா!"

"ரொம்பச் சிரமம். நம்ம மனுஷாளை நம்ம இஷ்டத்துக்கு வளைக்க முடியாது. வளைக்கறதும் தப்பு."

"ப்பா, எவ்வளவு தெளிவா திடமாப் பேசறே!"

"எனக்குத் தெரிஞ்சது பேசறேன்."

"இரண்டு நாள் பேசறப்பவே, உன்னைப் பத்தி பெரிய பிரமிப்பு வந்துடுத்து லலிதா."

"பிரமிப்புங்கறதே ஆரம்பம்தான். எதுவும் கடைசி வரைக்கும் பிரமிப்பா இருக்கிறதில்லே."

"என் அம்மா எனக்காக உழைச்சது பத்தி நிறையத் தடவை யோசிச்சிருக்கேன். எப்ப யோசிச்சாலும் பிரமிப்பாத்தான் இருக்கு."

"உங்களுக்குக் குழந்தை பிறந்து அதுகளை வளர்க்கறப்போ அந்த பிரமிப்புக் குறைஞ்சுடும்."

"குறையுமா?"

"குறையும். எந்த பிரமிப்பும் சீட்டுக் கட்டுல கட்டின வீடுதான். கட்டறப்பவே இது எப்ப விழும்னு ஒரு பயம் வருமே.... அது மாதிரிதான். சிலது உடனே விழும். சிலது கட்டிச் கண்டினா போறும் கபக்குன்னு உட்கார்ந்துக்கும்."

"உனக்கு அம்மா இல்லே லலிதா. அதான் இந்த உறவு பற்றிச் சீட்டுக்கட்டா நினைக்"

# நீண்ட காலம் நிற்காமல் உழைக்கும் சக்தி




**புதிய நிப்போ சூப்பர் ஜிங் குளோரைடு பென்லைட் செல்கள்.**

- உங்களுடைய காமிரா ஃப்ளாஷ், வாக்மன் மற்றும் உங்கள் குழந்தைகளின் எலெக்ட்ரானிக் விளையாட்டுப் பொருள்களுக்காக மட்டுமே சிறப்பாகத் தயாரிக்கப் பட்டவை.
- அகில உலகப் புகழ் பெற்ற நேஷனல், ஜப்பானின் தொழில் நுட்ப கூட்டுறவுடன் இந்தியாவில் இன்டோ நேஷனல் லிமிடெட்டினால் உருவாக்கப்பட்டவை. உங்களுக்கு இன்று உலகமெங்கும் உபயோகிக்கப்படும் நவீன ஜிங்க்குளோரைட் டெக்னலஜியின் தரமான பயன் கிடைக்கிறது.
- 'மல்டிபின் இன்டக்ரேடட் ஸீலிங்' உங்களுக்கு நீண்ட கால உழைப்பை உறுதி செய்கிறது. உங்களுடைய எலெக்ட்ரானிக் சாமான்களுக்கு இரட்டிப்பு பாதுகாப்பு கூட.
- இன்டோ நேஷனலின் அதி நவீன தொழிற் கூடத்தில் தயாரிப்பு.




## நிப்போ சூப்பர்

பொர சக்தி கொண்ட பாப்பர்

everest/S/87/INL/60 Tam B

## பொன்மொழிப்போட்டி முடிவு—13

**சரியான விடை:**

ராஜாஜி: ஒரு மதத்தைப் புரிந்து கொள்ளத் துப்பறியும் போலீஸ் மனப்பான்மையுடன் அதனை அணுகக் கூடாது. அதைப் புரிந்து கொள்ளும் பரிபக்குவத்தையே அது இழக்கச் செய்துவிடும்.

காந்திஜி: மனிதனுக்குச் சோதனைகள் ஏற்படும்போதுதான் தன்னிடமுள்ள குறைகளை உணர்கிறான்.

பெர்ட்ரண்ட் ரஸ்ஸல்: கடவுள் இருக்கிறாரோ இல்லையோ, கடவுள் இருக்கிறார் என்ற நம்பிக்கையும் மதச் சடங்குகளும் உலக மக்களுக்கு நன்மையே செய்துள்ளதை மறுக்க முடியாது.

ராமகிருஷ்ண பரமஹம்ஸர்: புழுவை விடக் கேவலமான மனிதன் பிற ஜீவராசிகளுக்காகப் பரிதாபப்படுவதுதான் பரிதாபம்! தேவைப்படுவது பரிதாபமல்ல, பிற ஜீவராசிகளிடமும் கடவுளைக் கண்டு செய்கின்ற சேவையே.

சத்ய சாயி பாபா: ஒரு மாணவன் மோசமானவனாக மாறினால் அது அவனை மட்டும் பாதிக்கிறது. ஓர் ஆசிரியர் தம் கடமையைச் சரியாகச் செய்யாது போனால் ஆயிரக்கணக்கான மாணவர்கள் பாதிக்கப்படுகிறார்கள்.

**சரியான விடை எழுதிய கீழ்க்கண்ட ஏழு பேரும் பரிசுத் தொகையான இருநூறு ரூபாயைச் சமமாகப் பகிர்ந்து கொள்கிறார்கள்.**

**திருமதி கோகிலம் நாராயணன், புது டெல்லி; மா.வனி. இரா. தங்கபாண்டியன், புதுக்கோட்டை; து. உமாதேவி, பொள்ளாச்சி; க. இராமசாமி, தண்டலை (திருச்சி); ராஜீவ் நரசிம்ஹன், பம்பாய்—58; ஜி. செல்வராஜன், வெங்கலம்—606 305; மீனாட்சி வைத்தியநாதன், சென்னை—80.**

---

கற."

"அம்மா இல்லேன்னு அப்பா. அப்பா இல்லேன்னு அண்ணு. யாராவது இருப்பா, பிரமிக்க வைக்கறதுக்கு. பொண்டாட்டி கொஞ்ச நாள் பிரமிக்க வைப்பா!"

"எல்லாத்தையும் புத்தியோட பார்க்கறே. இது ஏமாத்துமோன்னு சந்தேகப்பட்டே."

"நல்லது இது."

"எந்த அம்மாவாவது புத்திசாலித்தனமாத் தன் குழந்தையைப் பார்ப்பாளா?"

"வேற எப்படிப் பார்க்கணும்?"

"உணர்வு முக்கியமில்லையா லலிதா?"

"அப்படித் தோணும் முரளி. புத்தி நய வஞ்சகமானது. அது உள்ளடங்கிக் கணக்குப் போடும். எதிர்பார்க்கும். எதிர்பார்ப்பு இல்லாத உறவே இல்லே முரளி."

"உனக்கு நான் என்னவிதமான எதிர் பார்ப்பு ....?"

"செக்யூரிடி, கௌரவம், செக்ஸ்.... இப்படி எத்தனையோ..."

"யப்பா.... உறவுக்கு அர்த்தமேயில்லே."

"அதுதான் நிஜம். அதுதான் நான் சொல்ல ட்ரை பண்ற விஷயம்."

"இப்படிப் பழகினா போர டிக்காது?"

"இல்லே. சிக்கல் வராம இருக்கும்."

"எனக்கு இப்பக் கல்யாணமே பயமா இருக்கு."

"ச்சீய்.... எதுக்கு பயம்? நான் இருக்கேன், ஆரவாரமா அன்பு செலுத்தறதை விட அறிவோட நட்பு வச்சுக்கறது நல்ல இல்லேயா? அதுதான் சொன்னேன்."

"உணர்வுபூர்வமா இல்லாட்டி சின்னச் சண்டைக்கும் பிரிவு வந்திடுமே...."

"சண்டை எப்போ வரும், புரிஞ்சுக்க மறுக்கறபோதுதானே? நிஜம் தேடற புத்தி மறுதலிக்காது. இன்னிக்கு ஏன் என் கூட பேசலேன்னு மூஞ்சி தூக்காது. 'உனக்குத் தலைவலியா? எனக்குத் தலைவலிச்சாக் கூட யார் கூடயும் பேசமாட்டேன். டேக் ரெஸ்ட்'ன்னு விட்டுட்டுப் போகும். புரிஞ்சு கண்டு சௌஜன்யமா நகர்ந்து போற நட்போ, உறவோ நிலைச்சு நிற்கும். எதுவும் சுமையாகப் படாது முரளி. பணம், சொத்து, நட்பு, உறவு, எதுவும்."

"என்ன சொல்றதுக்கு ட்ரை பண்றேன்னே புரியலே."

"நம்ம உறவு தெளிவா இருக்கணும்னு பேசறேன்."

"நான் கொஞ்சம் எமோஷனல்."

"புரியறது."

"ரொம்ப ஒட்டற கேஸ். உருகற மனசு."

"அது அவஸ்யமான்னு கேட்டுக் கோங்கோ."

"யப்பா.... கேட்டுக்கறப்பவே நடுங்கறது மனசு. வெறும் புத்தி ஆளா இருக்கப் பயப்படறது."

"எனக்குப் புரியறது."

"என்ன?"

"நான் ஆம்பிளை வளர்த்த பெண் குழந்தை. நீங்க பெண் வளர்த்த ஆண் குழந்தை. அதனாலதான் கொஞ்சம் எதிர் எதிர்த் துருவமா இருக்கோம்."

"கஷ்டமோ இது?"

"ஆப்போஸிட் போல்ஸ் அட்ராக்ட் ஈச் அதர்னு சொல்லுவா."

"நான் அட்ராக்ட் ஆயிருக்கேன். நீ...?"

"ரொம்ப!"

"எப்படி?"

"இப்படி சொக்கத் தங்கமா, மிருதுவா ஒரு புருஷன் கிடைச்சதுல."

முரளி பேசாதிருந்தான்.

லலிதா அவனை மெல்ல உசுப்பினாள். தோள் மீது கை வைத்தாள். முழங்கால் போட்டு நின்றாள், முகம் நிமிர்த்தினாள். மெல்ல இதழோரம் முத்தமிட்டாள்.

இருளில் அவன் கண்கள் பளபளத்தன. சின்ன அலையலோடு அவளை ஊடுருவிப் பார்த்தன. முரளியை ஒரு பிரமிப்பு பற்றிக் கொண்டது. கூடவே சீட்டுக்கட்டுக் கோபுரம் நினைவுக்கு வந்தது.

(தொடரும்)

விடுவேன்! போய்யா வெளியே!''

டாக்டர் போட்ட சப்தத்தில் மிரண்டு போய் வாசலுக்கு விரைந்து ஆட்டோவில் தாவி ஏறிக் கொண்டான் அருண்.

மறுநாள்.

ஆபீசுக்கு மட்டம் போடுவதென்று முடிவு செய்துவிட்டு, காலை டிபனை முடித்துக் கொண்டு நர்ஸிங் ஹோமுக்கு விரைந்தான் அருண்.

அவன் சென்ற சமயம், கட்டிலில் எழுந்து உட்கார்ந்து பூரி கிழங்கை ஒரு பிடி பிடித்துக் கொண்டிருந்தான் சத்யா. அவனிடம் கால் நலன் விசாரித்துவிட்டு, தான் அவனைச் சுட நேர்ந்த பின்னணியை விளக்கினான் அருண். அவன் சொல்லச் சொல்ல, மெலிதாகச் சிரித்துக் கொண்டிருந்தான் சத்யா.

''அடே முட்டைக் கண்ணா! நீ எதையும் சுலபத்தில் நம்பி விடுவாய் என்று நன்றாகத் தெரிந்து வைத்துக் கொண்டு என் எதிரிகள் உன்னைப் பயன்படுத்தியிருக்கிறார்கள். நான் நேற்று ஒன்பது மணிக்கு வீடு திரும்புவேன் என்பதை எப்படியோ முன்கூட்டியே தெரிந்து கொண்டு, உன்னிடம் அழகாக ஒரு கதை ஜோடித்திருக்கிறார்கள்... ஒன்பது மணி வாக்கில் நுழைபவன் என் எதிரியாகத்தான் இருப்பான் என்று நீ முடிவு கட்டி, சுட்டு விட்டாய். சரி.... போனதெல்லாம் போகட்டும். நான் உன்னிடம் கொடுத்த டயரியையும், இரண்டுலட்சரூபாய்பணத்தையுமாவது பத்திரமாக வைத்திருக்கிறாயா — அல்லது அவற்றையும் என் பெயரைச் சொல்லி உன்னிடமிருந்து எவனாவது அடித்துக் கொண்டு போய்விட்டானா?''

''ஒரேயடியாக மட்டம் தட்டாதே சத்யா... நீ கொடுத்த அந்த இரண்டுமே பத்திரமாக இருக்கின்றன....''

''எங்கே வைத்திருக்கிறாய்—உங்க வீட்டிலே தானே?''

''இல்லே.... வேறு வேறு இடத்திலே.... அதைப் பற்றி அப்புறம் சொல்கிறேன்... முதல்லே உன் விவகாரம் பூராவும் எனக்குத் தெரிந்தாக வேண்டும்... ஒவ்வொரு தரமும் உன்னைச் சந்திக்கும்போதெல்லாம் எதையும் விலாவாரியாகக் கேட்டுத் தெரிந்து கொள்ள முடியாமலே தட்டிப் போய் விடுகிறது... இப்போது நீ சும்மாதானே இருக்கிறாய் சொல்லு!''

''ஸாரி முட்டைக் கண்ணா! எனக்கு இன்றைக்குத் தலைக்கு மேலே வேலை இருக்கிறது... டிபனைச் சாப்பிட்டுவிட்டு வெளியே புறப்படப் போகிறேன்.''

''அடிபட்ட காலும் பேண்டேஜுமாகவா?''

''கூட நாலு சக்கரமும் வைத்துக் கொள்ளப் போகிறேன். நீயும் வேண்டுமானால் என்னோடு வா. எனக்கு ஆட்சேபனையில்லை...''

டாக்டர் சிரித்துக் கொண்டே உள்ளே நுழைந்தார். அருணைக் கண்டதும், "என்ன! இன்னிக்கு யாரைச் சுடப் போறே?'' என்று விசாரித்தார். சத்யாவிடம், "பிரைவேட் டாக்ஸிக்குப் போன் பண்ணிச் சொல்லிவிட்டேன்... இப்போது வந்துவிடும்.... ரொம்பவும் ஸ்ட்ரெயின் பண்ணிக் கொள்ளாமல் போய் வாருங்கள்!'' என்றார்.





"பல வருஷமாக எழுதிப் பார்த்த பிறகுதான் தெரிந்தது நமக்கு எழுத வராது என்று!"

"அப்புறம்? எழுதுவதை நிறுத்திட்டீங்களா?"

"பிரபல எழுத்தாளனாகி ஆன பிறகு எப்படி நிறுத்த முடியும்?"

— திருமலை கோவிந்தன்

காவல் துறையின் ஒரு பிரிவான 'நார்காட்டிக்ஸ் இன்டெலிஜன்ஸ் பீரோ'வின் தலைவரை முதலில் பார்க்கச் சென்றான் சத்யா. அந்த அலுவலகத்தின் ரிஸப்ஷன் பகுதியிலேயே அருணை வடிகட்டி உட்கார்த்தி வைத்துவிட்டார்கள். சத்யா மட்டுமே உள்ளே செல்ல அனுமதிக்கப்பட்டான்.

சத்யா கொடுத்த தகவல்களைக் கேட்டுப் பிரமித்துப் போனார் அந்த அலுவலகத் தலைவரான ராஜகோபால். டெலிபோனை எடுத்து மளமளவென்று சில உத்தரவுகளைப் பிறப்பித்துவிட்டு, அலுவலக ஜீப்பில் ஆயுதம் தாங்கிய காவலர்களுடன் அவரே புறப்பட்டுவிட்டார், வேட்டைக்கு.

சத்யாவின் அம்பாஸடர் வழி காட்ட, ஜீப் ஒரு பெரிய பங்களாவின் காம்பவுண்டுக்குள் நுழைந்தது. சத்யா, ராஜகோபால், காவலர்கள் தோரணையுடன் இறங்கியபோது அருணும் பந்தாவாக இறங்கினான்.

"ஐயா இருக்கிறாரா?" என்று துள்ளி வந்த வேலைக்காரனிடம் ராஜகோபால் விசாரித்தார்.

"மாடியிலே ரூம்லே இருக்காருங்க.... உட்காருங்க இப்படி.... நான் போய்த் தகவல் கொடுத்துட்டு வாரேன்...." என்றவனைப் புறக்கணித்து, "பரவாயில்லே.... நாங்கள் மேலேயே போய்ப் பேசிக் கொள்கிறோம்!" என்று சொல்லி, மாடிப் படிகளில் விரைந்து ஏறினார் ராஜகோபால்.

பச்சை நிறக் கார்ப்பெட் விரித்த அறையில் ஓர் ஒற்றை சோபாவில் கன்னத்தில் கை வைத்தபடி அமர்ந்திருந்த அந்தப் பெரிய மனிதர் எதிரில் ராஜகோபால் போய் நின்றதும், பேயைக் கண்டது போல மிரண்டார் அவர்.

"பயப்படாதீர்கள். உங்களிடம் சும்மா ஒரு தகவல் கேட்டுவிட்டுப் போகலாமென்று வந்தேன்...." என்று ராஜகோபால் சொன்னதும், தடுமாறினார் பெரிய மனிதர்.

"தகவலா? என்ன விஷயம்? எதைப் பற்றித் தகவல்?"

"உங்கள் மருந்துக் கம்பெனி பற்றித்தான்...."

"தாராளமாகச் சொல்கிறேனே!"—பெரிய மனிதருக்குத் திடீரென்று தெம்பு வந்துவிட்டது. "இருமலுக்கு ஃபர்ஸ்ட் கிளாஸ் ஸிரப் தயாரிக்கிறோம்... தவிர, தலைவலி, ஜலதோஷம், ஃப்ளூ இவற்றுக்கான டாப்லெட்ஸ்...."

"வெயிட், வெயிட்! இந்த லிஸ்ட் எனக்குத் தேவையில்லை. உங்கள் தொழிற்சாலைக்கென்று மூணு மாசத்துக்கு முன்னாலே ரா—மெடீரியல்ஸ் வரவழைத்தீர்களே அயல் நாட்டிலிருந்து...."

"எஸ் எஸ்.... அதற்கென்ன?"

"அதிலே கொஞ்சம் சாம்பிள் வாங்கிக் கொண்டு போகலாமென்று வந்தேன்... அநாவசியமாக ஆபீசில் வந்து தொந்தரவு செய்ய வேண்டாமென்றுதான் இங்கேயே வந்துவிட்டேன்..... நீங்கள்தான் வீட்டிலே கூட சாம்பிள் வைத்திருப்பீர்களே....!"

பெரிய மனிதரின் முகம் வெளிறியது. சத்யாவும் அருணும் அவரையே பார்த்துக் கொண்டிருந்தபோது, ராஜகோபாலின் பார்வை அந்த அறையை ஒரு வட்டம் அடித்து, சற்றுத் தொலைவில் இருந்த ஒரு மேஜை மீது பாய்ந்தது. சட்டென்று எழுந்து மேஜையருகில் சென்றுவிட்டுத் திரும்பியவர், தாம் எடுத்த பொருளை எல்லாரும் பார்க்கும்படியாகக் காட்டினார்:

ஒரு ரூபாய் ஷாம்பூ பொட்டலம் போல இரண்டு பொட்டலங்கள்.

அவற்றைக் கண்டதும், பெரியவருக்கு மாரடைப்பே வந்துவிடும் போலிருந்தது. "அது... அது... நான்... என்னுடையதில்லே.." என்று திணறித் திணறி ஏதோ சொல்ல முயன்றார். அத்துடன், ராஜகோபால் கையிலிருந்து பொட்டலங்களைப் பறிக்கவும் முற்பட்டார்.

ராஜகோபால், "அசையாதீர்கள் இருந்த இடத்தை விட்டு!" என்று அதிகாரக் குரலில் போட்ட அதட்டலில் அடங்கிப் போய் சோபாவில் தொப்பென்று உட்கார்ந்தார் பெரியவர்.

"நீங்கள் சமீப காலமாகச் செய்து வந்த பிஸினெஸ் பற்றிய முழுத் தகவல்களையும் — இதோ இருக்கிறாரே மிஸ்டர் சத்யா, இவர் எங்களுக்குக் கொடுத்திருக்கிறார். ஓரிரண்டு பாயிண்ட்டுகளை மட்டும் நீங்கள் தெளிவுபடுத்தினால் போதும். இந்தப் பிரமாதமான ஐடியாவை உங்களுக்குச் சொல்லித் தந்தது யார்?"

"எல்லாவற்றையும் சொல்கிறேன்... அதற்கு முன்னால் ஒரே ஒரு போன் மட்டும் பண்ணிக் கொள்ளலாமா?"

"உங்கள் கோடவுனைக் கூப்பிட்டு, சரக்குகளை அப்புறப்படுத்தச் சொல்லி, சங்கேத பாஷையில் உத்தரவு போடுகிற உத்தேசம் ஏதுமிருந்தால், அதை நீங்கள் கைவிட்டு விடலாம். ஏனென்றால் போலீஸ் படை இந்நேரம் உங்கள் கோடவுனைச் சுற்றி வளைத்திருக்கும்...."

"நோ நோ... இது என் சொந்த மகளுக்கு... அவள் லேடீஸ் ஹாஸ்டலில் தங்கியிருக்கிறாள்... அவளுடன் ஒரு வார்த்தை..."

# நல்ல வளர்ச்சி போர்ன்விடா பயிற்சி!

அன்னையர், அறிவர்: கேட்பரிஸ் போர்ன்விடா கோகோ, மால்ட், பால் மற்றும் அசல் சீனியின் ஊட்ட நலன்களைக் கொண்டது. போர்ன்விடா குழந்தைகள் மிக விரும்பும் அத் தனிச் சுவையை பாலின் குணத்துடன் அளிக்கிறது.

தினமும் போர்ன்விடா அளிக்கப்படும் குழந்தைகள் வேலையிலும் விளையாட்டிலும் கூர்மையோடிருக்கிறார்கள். அது, அவர்களுக்கு ஆரோக்கியத்தையும் சுறுசுறுப்பையும் அளிக்கிறது. அவர்களுடைய வளர்ச்சிக்கு எல்லா வகையிலும் நலன் அளிக்கிறது.

அதன் தனிச் சுவையுடன் இணைந்திட்ட இன்றைய வளர்ச்சி.

**கேட்பரிஸ்**
**போர்ன்விடா**




OBM/9174 TAM



"அதோ போறாளே, அவள் காதலைப் பெற நானும் இருபது வருஷமா முயற்சி செய்கிறேன்! முடியலே!"
"யார் அந்தப் பெண்?"
"என் மனைவிதான்!"
— கடலூர் கன்னியப்பன்.

"சார்! உங்க பெண் சராகா பார்மாவிலே தானே வேலை பார்க்கிறாள்? அவள் பெயர் லேகாதானே?" — சட்டென்று கேட்டான் அருண்.

"இவரும் உங்க இன்டெலிஜென்ஸ் ஆபீசர்களிலே ஒருத்தரா?"

"எஸ்! அப்படித்தான்!" —ராஜகோபாலை முந்திக் கொண்டு தானே பதிலளித்தான் அருண்.

'அட அல்பமே!' என்று ராஜகோபால் அவனை ஒரு பார்வை பார்த்தார். பிறகு, "உம், சொல்லுங்கள் மிஸ்டர் பாலசுந்தரம்! எப்படி இந்த ஹெராயின் கடத்தல் தொழிலே ஆரம்பித்தீர்கள்?" என்று அந்தப் பெரிய மனிதரிடம் கேட்டார்.

"என் பிஸினெஸ்லே எனக்கு அதிக லாபம் கிடைக்காததாலே, எயிட்ஸ் நோய்க்கு மருந்து கண்டுபிடிச்சு, ஏராள மாகப் பணம் சம்பாதித்து விடலாமென்று அதற்கான முயற்சிகளில் என் ஆராய்ச்சிப் பிரிவை முடுக்கிவிட்டேன்... பணத்தைத் தண்ணீராகச் செலவழித்தேன்... வெளியிலே நிறையக் கடன் வாங்கினேன்... பதினைந்து லட்ச ரூபாய் செலவானதாக எல்லாரிடமும் சொன்னேனே தவிர, அதைப் போல நாலு மடங்கு ரகசியமாக வாரிஇறைத்தேன்... என்னாலே மருந்துக்கான ஃபார்முலாவைக் கண்டுபிடிக்க முடியல்லே... சராகா அந்த விஷயத்தில் என்னைத் தோற்கடித்து விட்டது. பண நஷ்டம்... தவிர, வழக்கமான தயாரிப்புகளை உற்பத்தி செய்யப் பணமில்லாத குறை... இப்படிப்பட்ட சந்தர்ப்பத்திலே தான், பிஸினஸ் டூர் போய் விட்டுத் தாய் நாடு திரும்புகிற போது, பாரிஸ் டி கால் ஏர் போர்ட்லே ஆல்பர்ட் செக்வைரா என்பவனைச் சந்தித்தேன்... அவன்...

"கோவாவிலே பிறந்து, பெங்களூரிலே வாழ்ந்து, ரொம்ப வருஷங்களுக்கு முன்னாலேயே மெட்ராசுக்கு வந்து போக ஆரம்பித்தவன்... நிறைய மொழிகள் தெரிந்தவன்... தமிழ் ரொம்ப நன்றாகப் பேசுவான்... அவன் கடத்தல் செய்யாத பொருளே கிடையாது...

ராஜகோபால் விவரம் சொல்லச் சொல்ல, அருணின் காதில், "என் டயரியிலே இந்த விவரமெல்லாம் இருக்கு!" என்று கிசுகிசுத்தான் சத்யா.

"ஆல்பர்ட்டுக்கு ஹெராயின் கடத்துவதில் சிரமம் ஏற்பட்டிருந்ததால் என் உதவியை நாடினான். அதன்படி, என் ஃபாக்டரிக்கு ரா — மெடீரியல்ஸ் இறக்குமதி செய்கிற சாக்கில், அயல்நாடுகளிலிருந்து ஹெராயின் பொட்டலங்களையும் வரவழைத்தேன்... கெமிகல்ஸ் பாக்கேஜுக்குள் சின்னச் சின்ன ஹெராயின் பொட்டலங்களையும் ஒளித்து வைத்து அனுப்புவார்கள்... தன்மீது சந்தேகம் வராதபடி இருக்க, இப்படி ஒரு யுக்தியைக் கையாண்டான் ஆல்பர்ட்... சரக்கு எங்கள் கோடவுனுக்கு வந்துவிடும்... நானே பாக்கேஜைப் பிரித்து, ஹெராயின் பொட்டலங்களை இந்தப் பங்களாவுக்குக் கொண்டு வருவேன்... அவ்வப்போது ஆல்பர்ட் எனக்கு ஃபோன் பண்ணுவான்... நான் இந்த ஹெராயின் பாக்கெட்டுகளை அவன் சொல்கிற பார்ட்டியிடம் கொடுத்துவிட்டு, பணத்தை வாங்கி வருவேன்... ஆல்பர்ட் ஆளனுப்பி, பணத்தை கலெக்ட் பண்ணிக் கொள்வான்... எனக்கும் கைநிறையக் கமிஷன் கிடைக்கும்... நான் என்னவோ டெம்பரரியாகத்தான் இந்த வேலையில் ஈடுபட்டிருந்தேன்... என் நஷ்டத்தை ஓரளவுக்கு ஈடு கட்டிக் கொண்ட பிறகு, எயிட்ஸ் நோய்க்கான மருந்து தயாரிப்பில் ஈடுபடத் தீர்மானித்திருந்தேன்... அதற்காகவே அந்த மருந்து ஃபார்முலாவை எப்படியாவது கைப்பற்றிக் கொண்டு வரச் சொல்லி, என் மகள் லேகாவை சராகாவில் வேலையில் அமர்த்தியுமிருக்கிறேன்... இதுதான் சார் உண்மை.."

சொல்லி முடித்துவிட்டு, ஒரு பெருமூச்சு விட்டார் அந்தப் பெரிய மனிதர் பாலசுந்தரம்.

"சரி... மற்ற விஷயங்களை எங்கள் ஆபீசில் போய்ப் பேசிக் கொள்வோம்... அதற்கு முன்னால் இந்த அறையை ஸெர்ச் பண்ண வேண்டிய வேலை இருக்கிறது..." என்ற ராஜகோபால் மளமளவென்று, காரியத்தில் இறங்கினார்.

நாற்பது நிமிடங்களுக்குப் பிறகு பாலசுந்தரத்தையும் ஜீப்பில் ஏற்றிக் கொண்டு புறப்பட்டார்கள்.

ஜீப்பில் போகும் போது சத்யாவிடம் மெதுவாக விசாரித்தான் அருண். "இப்போ ஆபீசுக்குப் போன உடனே, பாலசுந்தரத்திடம் ஸ்டேட்மென்ட் எழுதி வாங்கிக் கொண்டு விட்டு, பெயிலில் விட்டுவிடுவார்களா?"

பலமாகத் தலையாட்டினான் சத்யா. "அது அவ்வளவு சுலபத்தில் நடக்கிற விஷயமில்லை... பொய் சொல்கிறாரா அல்லது அவர் சொன்னது முழுவதும் உண்மை தானா என்று லை—டிடெக்டர் கருவி வைத்துப் பார்ப்பார்கள். திருப்தி ஏற்படவில்லையென்றால் பென்டதால் ஊசி போடுவார்கள்... எனக்கென்னவோ இந்த ஆள் ஜெயிலுக்குப் போய், சோள தோசையும் கடலை உருண்டையும் தின்னுவார் என்றுதான் தோன்றுகிறது..."

"அதனாலென்ன? அவருடைய பெரிய மனுஷ இமேஜ் பாதிக்காதே!"

''அதென்னவோ உண்மைதான்!''

''இவருக்காகத்தான் — இன்னும் குறிப்பாகச் சொல்ல வேண்டுமானால் — இவருடைய மகள் லேகாவுக்காக அந்த ஃபார்முலாவைத் தேடி அலைகிறேன்... அதுவானால் கைநழுவிப் போய்க் கொண்டிருக்கிறது!''

''ஃபார்முலாதானே! எங்கும் போய்விடவில்லை... பத்திரமாக இருக்கிறது!''

''எங்கே? எங்கே?''

''நான் கொடுத்தேனே டயரி — அதற்குள் அந்த ஃபார்முலா பேப்பரை எடுத்து வைத்தேன்...''

''வண்டியை நிறுத்தச் சொல்லுடா சத்யா... இப்பவே போய் அதை எடுக்க வேண்டும்...''

''டயரிதான் பத்திரமாக இருப்பதாகச் சொன்னாயே!''

''அதை எனக்கு வேண்டிய சலூன்காரர் சதாவிடம் கொடுத்து வைத்திருக்கிறேன்... அந்த ஆளுக்கு அவ்வளவாகப் பத்திர உணர்ச்சி கிடையாது!''

''அலட்டிக் கொள்ளாமலிரு... ராஜகோபால் சார் நம்மை விட்டதும் நேரே சதா கடைக்குப் போவோம் இரண்டு பேரும்...''

**பி**ற்பகல் 12.40 க்கு அருணும் சத்யாவும் சதா கடைக்குப் போய்ச் சேர்ந்த போது, அவர் கன்னாபின்னாவென்று இரைச்சல் போட்டுக் கொண்டிருந்தார். இவர்களைக் கண்டதும், ''கேளு சார் அக்கிரமத்தை!'' என்று ஆரம்பித்து, புதிதாகக் கடையில் அப்ரெண்டிஸாகச் சேர்ந்திருந்த பையன் மீது புகார்க் காண்டம் படித்தார். ''ஷேவிங் கத்துக்கடா கய்தேன்னேன்... செய்ஞ்சான் சார்... கத்தியிலே இருந்த சோப் நுரையை, இந்த டிராயர்லே இருந்த பேப்பர்கள்லே வழிச்சுக் குப்பைத் தொட்டியிலே கடாசிட்டான் சார், கஸ்மாலம்... மூணும் மாசம் ஏம்சந்த் மார்பாடி கடைலே மோர் தரம் அடகு வச்ச ரசீது, கல்யாண நோட்டீசு, என் மச்சான் போட்ட லெட்டரு... அல்லாமே பூடுச்சு சார்...''

''சதா! நான் உங்கிட்ட ஒரு டயரி கொடுத்தேனே — அது...''

''அது இருக்குது சார்... அதுக்குள்ளே ஒரு துண்டுக் காகிதம் செருகியிருந்தே பாரு, அதைக் கூட இந்த சோமாறி வுட்டு வைக்கல்லே சார்...

தொப்!

மயங்கி விழுந்த அருணின் முகத்தில் தண்ணீர் பீய்ச்ச, கண்ணாடி புட்டியை எடுத்தார் சதா.

**நா**ன்கு நாட்களுக்குப் பிறகு, கடற்கரையில் மாலைநேர ஜோடிகளின் எண்ணிக்கையில் அன்று இரண்டு கூடுதலாக இருந்தது.

அருண் — லேகா; சத்யா — அம்பிகா.

''உங்களுக்கு விஷயம் தெரியுமா அருண்! இவர் எனக்கு ஏதோ தூரத்துச் சொந்தமாம்... எங்கம்மா சொல்லித்தான் எனக்கே தெரியும்... மாமாவுக்குக் கூட அந்த உறவு முறை தெரியாதாம்!'' என்றாள் அம்பிகா முகமெல்லாம் பூரிப்பாக.

''அது சரி சத்யா... நீ ஏன் சராகா ஆபீசுக்குப் பாணியைப் பார்க்க வந்தாய் என்று சொல்லவே இல்லையே!'' என்று கேட்டான் அருண்.

''பாலசுந்தரம் வரவழைத்த 'ரா — மெடீரியல்' சாம்பிள் எனக்குக் கிடைத்திருந்தது... அதை டெஸ்ட் செய்வதற்காக சராகா ஆய்வுக் கூடத்தை அணுகினேன்... அப்போதுதான் அந்த சாம்பிளில் ஹெராயின் கலந்திருக்கிற விஷயம் தெரிய வந்தது... அதிலிருந்துதான் என் வேட்டையைத் தீவிரமாக்கினேன்...''

''என் அப்பா இவ்வளவு கீழ்த்தரமாக ஒரு கடத்தலில் இறங்குவார் என்று நானே எதிர்பார்க்கவில்லை...'' என்றாள் லேகா வருத்தத்துடன்.

''அவர் ஜெயிலிலிருந்து திரும்பி வந்த பிறகாவது ஒழுங்காக பிஸினஸைக் கவனித்தால் சரி...'' — அருண்.

''முட்டைக் கண்ணு! நீ செய்ததிலேயே புத்திசாலித்தனமான காரியம் அந்த இரண்டு லட்ச ரூபாயைப் பத்திரப்படுத்தியதுதான்!''

''அப்படி எங்கே வைத்திருந்தார் பணத்தை?'' — அம்பிகா கேட்டாள்.

''சென்டிரல் ஸ்டேஷன் குளோக் ரூமில் வைத்துப் பூட்டி, ரசீதை ஆபீசில் வைத்திருந்தான்...''

''உண்மையைச் சொல்லட்டுமா? கையிலே பணக்கற்றையை வைத்துக் கொண்டு ஆட்டோவைக் கூப்பிட்ட போது 'வராது சார்! வண்டி சென்டிரலுக்குப் போவுது!' என்று சொன்னான்... 'நானும் அங்கேதான் போகணும்!' என்று சும்மாவானும் சொல்லி ஏறிக் கொண்டு விட்டேன்... சென்டிரல் ஸ்டேஷனுக்குள் நுழைந்து பிளாட்பாரத்தில் அலைந்தபோதுதான் குளோக் — ரூம் என் கண்ணில் படவும், அந்த ஐடியா வந்தது!''

''ராஜகோபாலை மத்தியானம் பார்த்தேன்... ஆல்பர்ட் செக்வைராவின் கும்பலை அன்றைக்கே மடக்கிப் பிடித்து விட்டாராம்... நான் செய்திருக்கும் உதவிக்கு, கேஷ் அவார்ட் வாங்கித் தருவதாகச் சொல்லியிருக்கிறார்...'' என்றான் சத்யா.

''நீ அவார்ட் வாங்கி என்னடா புண்ணியம்? அநியாயமாக அந்த ஃபார்முலா போய்விட்டதே!'' — அருண்.

''அந்த ஃபார்முலாவுக்காக என்னாலான ஒரே ஒரு உதவியை எந்த நிமிஷமும் நான் செய்யத் தயார்!''

''என்ன உதவி?'' — அருண், லேகா, அம்பிகா மூவரும் ஒரே சமயத்தில் கேட்டார்கள்.

''வேறென்ன? ஒரு நிமிஷம் மௌன அஞ்சலி செலுத்துவதுதான்!''

**வே**தாளம் சொல்லி முடித்ததும் வெகு நேரத்துக்கு மண்டையைப் போட்டு ஆட்டிக் கொண்டிருந்தார் அற்புதசாமி.

(முற்றும்)

# ஏகாம்பரமும் பிளாக்மெயிலும்

கதை: என்.சி.மோகன்தாஸ்
படம்: விஜய

ஏகாம்பரம் வீடு...

மாமா, நானும் அக்காவும் கோயிலுக்குப் போய்ட்டு வர்றோம். வீட்டை பத்திர மாப் பார்த்துக் குங்க!

சரி போய்ட்டு வாங்க!

போன் மணி அடிக்கிறது. பேசுகிறார்...

ஹலோ! யார் பேசறது?

ஹஹ் ஹா ஹா...

பேரே ஹஹ்ஹா தானா?

கோயிலுக்குப் போயிருக்கும் உன் மனைவி திரும்பி வரமாட்டா!

என்னது?

கடத்தி வெச்சிருக் கோம். அவள் கழுத்தில் இருக்கும் பத்துப் பவுன் தாலி பறி போக வேண் டாமல பத் தாயிரம் ரூபாய் பணம் கொடுக்கணும்.

பணத்தை எங்கே கொண்டு வரணும்?

ஏரிக்கரை ஆல மரத்துக்குக் கொண்டு வா!


ஏகாம்பரம் பணப்பையுடன் போய்ச் சேர்ந்தார்.
பணம் சரியா இருக்கா? வச்சுட்டுப் போ!
என் மனைவி எங்கே?


வீட்டுல இருப்பா, போய்ப் பார்!


ஏண்டி? எங்கடி போனே?
கோயிலுக்கு. சொல்லிட்டுத் தானே போனேன்! ஆமா, குமரேசு வந்தானா?
தெரியலை. அப்போ உன்னை யாரும் கடத்தலையா? அப்போ யார் இந்த வேலையைச் செய்திருப்பா?


அப்போது அவசரமாக ஒருவன் ஓடிவந்து...
உங்கள் குமரேசுவைப் பாம்பு கடிச் சிட்டது.
பாம்பா? ஐயோ, எப்படி?


டேய் குமரேசா. அப்பா அக்கான்னு கூட பார்க்காம கடத்தல்னு சொல்லிப் பணம் பறிச்சது நீ தானா? பணத்துக்குப் பதில் நான் பாம்பை வைச்சதில் மாட்டிக்கிட்டயா? படுடா மூதேவி! படு!

# முடிவுரையில் ஒரு முகவரி

— பீஷ்மன் —

மணி நாலரை. ஆஸ்பத்திரி சந்தைக் கடையாகிவிட்டிருந்தது. நாலு மணியானுலே இந்த நிலைதான். நோயாளிகளைப் பார்க்க வருகிறவர்கள் அது ஓர் ஆஸ்பத்திரி என்பதையே மறந்து விடுகிறார்கள். எத்தனை கூச்சல் போட்டுப் பேசுகிறார்கள்!

கேசவன் படுத்திருந்த வார்டு ஸ்பெஷல் வார்டு என்பதால் அதில் ஆறு படுக்கைகள் தாம். ஜெனரல் வார்டில் இருப்பதைப் போல, இங்கே அத்தனை கும்பல் வராதென்றாலும் ஒவ்வொரு கட்டிலைச் சுற்றியும் நாலு மணியானால் நான்கைந்து பேருக்குக் குறைச்சல் இல்லை. அவனைப் பார்க்க மாலையில் நாராயணன் வருவான். காலையில் அவன் மனைவி வருவாள். மாலையில் நாராயணன் வரும்போது, என்றாவது அவன் பையன் பாஸ்கரையும் அழைத்து வருவான்.

நாராயணனைப் பற்றி அவன் நினைத்துக் கொண்டிருக்கும்போதே கையில் பிளாஸ்டிக் கூடையில் அவனுக்கு இரவுச் சாப்பாட்டுடன் நாராயணன் உள்ளே நுழைந்து கொண்டிருந்தான். கட்டிலில் படுத்துக் கொண்டிருந்த கேசவன் மெல்லிய புன்னகையுடன் எழுந்து உட்கார்ந்து கொண்டான்.

எதிரேயிருந்த ஐந்தாம் எண் கட்டிலில் படுத்துக் கொண்டிருந்த கிழவர், சிரமப்பட்டு எழுந்திருந்து, தலைக்கடியிலிருந்த தலையணையைச் சாய்மானமாக வைத்துக் கொண்டார். அறையைச் சுற்றித் தன் பார்வையை ஓட விட்ட அவர் முகத்தில் சொல்லவொண்ணாத சோகம் கப்பியிருப்பதாகக் கேசவனுக்குத் தோன்றியது.

கிழவர் கன்னத்தில் கையை வைத்துக் கொண்டு சோகமாக உட்கார்ந்திருந்தார். அந்த அறையில் மற்ற கட்டில்களுக்கு அருகேயெல்லாம் கூட்டம் நிரம்பி வழிந்தது. நோயாளிகளைப் பார்க்க வந்த கூட்டமாக இல்லை அது. ஏதோ உல்லாசமாகப் பொழுது போக்க ஓர் இடம் கிடைத்துவிட்டதைப் போன்ற துறுதுறுப்புடன் அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள்.

இந்தக்கிழவரைப் பார்க்கமட்டும் யாருமே வரக் காணோம். தினம் பகல் ஒரு மணிக்கு, யாரோ ஓர் ஆள் டிபன் காரியரில் சாப்பாடு எடுத்துக் கொண்டு வந்து அவர் கண்ணில் படும்படி வைத்துவிட்டுச் செல்கிறான். அதே ஆள் இரவு ஏழரை அல்லது எட்டு மணிக்கு ஒரு பிளாஸ்டிக் கூடையில் அவருக்கு ஏதோ பலகாரமோ — ரொட்டி, பழங்களோ கொண்டு வந்து கொடுத்துவிட்டுப் போகிறான்.

அவன் அவரை ஏதும் விசாரிப்பதாகத் தெரியவில்லை. அவரும் அவனிடம் ஒன்றிரண்டு வார்த்தைகளுக்கு மேல் பேசி அவன் கேட்டதில்லை. சாப்பாடு கொண்டு வரும் ஆள் எடுபிடி ஆளாகத்தான் தோன்றினானே தவிர, கிழவரின் உறவுக்காரன் என்று எண்ணும்படியாகத் தெரியவில்லை.

அப்போ.... இந்தக்கிழவர் என்ன அனாதையா?

இவன் சிந்தனைகளை யூகித்துவிட்டார் போல, கிழவர் இவனையே தீவிரமாகப் பார்த்துக் கொண்டிருந்தார். கேசவனுக்குச் சங்கடமாக இருந்தது.

நல்லவேளை, "அநேகமா நீ திங்கட்கிழமை டிஸ்சார்ஜ் ஆயிடுவே. கவலையை விடு...!" என்று சொல்லிக் கொண்டே வந்தான் நாராயணன்.

"என்ன ஸார் சாப்பிடலையா...?" என்று கேட்டுவிட்டு, ஸ்டூலை எடுத்துப் போட்டுக் கொண்டு சம்பிரமமாகச் சாப்பாட்டுக் கடையைத் தொடங்கினார் நான்காம் எண் படுக்கையில் இருந்த சாயபு.

கேசவன் கைக்கடிகாரத்தைப் பார்த்



தான். மணி எட்டுத்தான் ஆகியிருந்தது. வந்தவர்கள் எல்லாம் போய், ஆஸ்பத்திரியில் அநேகமாக அரவம் ஒடுங்கிப் போயிருந்தது. ஜெனரல் வார்டில் யாரோ ஒரு நோயாளி ஈனஸ்வரத்தில் இடைவிடாமல் முனகிக் கொண்டிருந்த ஒலி, அங்கு நிலவிய அமைதிக்கு ஒருவிதச் சோகம் கூட்டிக் கொண்டிருந்தது.

ஐந்தாம் எண் கட்டில் கிழவர் சாய்ந்தவாறு தூங்கிக் கொண்டிருந்தார்.

கேசவன் எழுந்து போய்க் கை கழுவிவிட்டு வந்து சாப்பிட உட்கார்ந்தபோது, கிழவரின் கட்டிலுக்கருகில் பிளாஸ்டிக் கூடையில் அவருக்கு ஏதோ உணவுப் பொட்டலம் கொண்டு வைத்துவிட்டுப் போய்க் கொண்டிருந்தான் ஒருவன். வெளியே சென்ற அவனிடம் வார்டு பாய் ரத்தினம் ஏதோ பேசிவிட்டுச் சிரித்துக் கொண்டே உள்ளே வந்தான்.

''ஏன் ரத்தினம், அந்த ஆள் பாட்டுக்கு சாப்பாட்டுக்கூடையைவைச்சுட்டுப்போயிட்டானே! கிழவரை எழுப்பி சாப்பிடச் சொல்லக் கூடாது....?''

ரத்தினம் சிரித்தான்.

''பெத்த பிள்ளைக்கே அக்கறை இல்லீங்களே ஸார். இவன் யாரு...? வேலைக்காரன் தானே...? இவனுக்கு என்ன வந்தது...? நீங்களுந்தான் பாக்கறீங்களே! இந்தக் கிழவருக்கு உறவு முறையின்னு யாராச்சும் வந்து பார்க்கறாங்களா? இவ்வளவுக்கும் கிழவரோட பிள்ளை பெரிய ஆபீஸராம்! எப்பவாவது காரிலே வருவாரு. வந்தா ரெண்டு நிமிஷம் கூட இங்கே அப்பாருகிட்ட நின்னு பேச மாட்டாரு. டாக்டருகிட்டப் பேசிட்டுப் போயிடுவாரு....''

சுவாரசியமாகக் கேட்டவாறே, கேசவன், டிபன் காரியரைத் திறந்து வைத்துக் கொண்டு சாப்பிட ஆரம்பித்தான்.

''பாவம்... கிழவர் கேஸ் ஒண்ணும் தேறாதுன்னு பேசிக்கிறாங்க...!'' என்று மெதுவாகச் சொல்லிவிட்டுப் போனான் ரத்தினம்.

சாப்பிட்டு முடித்து, டிபன் காரியரைக் கழுவிவிட்டு வந்தபோது, கிழவர் பிளாஸ்டிக் கூடையிலிருந்து பொட்டலத்தை எடுத்துப் பிரித்துக் கொண்டிருப்பதைக் கவனித்தான் கேசவன்.

தண்ணீர் கூட எடுத்து வைத்துக் கொள்ளாமல் பொட்டலத்திலிருந்த இட்லியை விண்டு விண்டு வாயில் போட்டுக் கொண்



டிருந்தார் அவர்.

அவரைப் பார்க்கும்போது கேசவனுக்குப் பாவமாக இருந்தது.

எழுந்து போய், அவரருகில் இருந்த பிளாஸ்கில் இருந்து தம்ளரில் வெந்நீர் ஊற்றி அவர் அருகில் வைத்தான்.

"தாங்க்யூ" என்று சொல்லிவிட்டுக் கனிவுடன் அவனைப் பார்த்தார் அவர்.

இந்தக் கனிவை வாங்கிக் கொள்ளத் தெரியவில்லையே அவர் பிள்ளைக்கு — என்று தோன்றியது கேசவனுக்கு.

பெரிய உத்தியோகத்தில் இருப்பதால் அவருடைய பிள்ளையால்தான் அடிக்கடி வந்து போக முடியவில்லை. மருமகள் கூட ஒருமுறை வந்ததாகத் தெரியவில்லையே!

"வீட்டுலேருந்து' துணைக்கு யாரையாவது வரச் சொல்றதுதானே?"

கிழவர் ரொம்ப நிதானமாகத் தலையை உயர்த்தி, தீர்க்கமாக அவனைப் பார்த்தார்.

"யார் வர முடியும் ஸார்? பையனுக்குப் பெரிய வேலை. மருமக எங்கேயுமே வர மாட்டா. பேரனும் பேத்தியும் காலேஜிலே படிக்கிறுங்க. யார் வருவாங்க? டாக்டர் கிட்டே போன் பண்ணிச் சொல்றுன் பையன். அவர் கவனிச்சுக்கிருர்." —

கவலையில்லாமல்தான் பேசுகிருரா, இல்லை, வெறுப்பை மறைத்துப் பேசுகிருரா என்று அவருடைய பேச்சிலிருந்து கேசவனுல் எதையும் புரிந்து கொள்ள முடியவில்லை.

பணமும் செல்வாக்கும் இருந்துவிட்டால் மட்டும் போதுமா? பாசம் என்பதை வலுக்கட்டாயமாக எப்படி இறக்குமதி செய்வது?

**ம**றுநாள் பிற்பகல் திடீரென்று கிழவருக்கு மூச்சு வாங்க ஆரம்பித்துவிட்டது. அவர் படும் அவஸ்தையைப் பார்த்துப் பயந்து போய், கேசவன்தான் ஸ்டாப் நர்ஸைக் கூட்டிக் கொண்டு வந்தான்.

அவள் பரபரத்து, டியூட்டி டாக்டரை வரவழைக்க, அவர் கிழவருக்கு ஆக்ஸிஜன் செலுத்தச் செய்ய.... ஓர் அரை மணி நேரத்தில் அந்த வார்டே திமிலோகப்பட்டுவிட்டது.

அவரை தினமும் கவனித்துக் கொண்டிருந்த பெரிய டாக்டரும் வந்து விட்டார்.

எப்படியோ... கிழவரை ஒரு நிதானத்துக்குக் கொண்டு வந்தாயிற்று.

ஒன்றுமே நடக்காதது போல, அன்று சாயங்காலம் அவர் கட்டிலில் சாய்ந்து கொண்டு முகட்டு வளையைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

கிழவரின் பிள்ளை, அல்லது வேறு யாராவது அவர் வீட்டிலிருந்து அன்று கட்டாயம் வருவார்களென்று கேசவன் எதிர்பார்த்தான்.

யாரும் வரவில்லை.

வழக்கம் போல, அந்த வேலைக்காரன் தான் வந்துவிட்டுப் போனுன். கிழவர் அவனிடம் ஏதும் விசாரிக்கவில்லை. அவர் யாரையும் எதிர்பார்த்து ஏமாந்ததாகவே தெரியவில்லை.

கேசவனுக்கு வேடிக்கையாக இருந்தது.

**தி**ங்கட்கிழமை காலை அவனைப் பரிசோதித்த அவனுடைய டாக்டர், "யூ ஆர் ஆல் ரைட் மிஸ்டர் கேசவன், யூ கேன் கோ ஹோம் டுடே," என்று சொல்லிவிட்டுச் சென்ருர்.

"எனக்கு இன்னைக்கு டிஸ்சார்ஜ் பர்வதம்" என்று ஒரு குழந்தையின் குதூகலத்துடன் அவன் மனைவி பர்வதம் வந்த போது சொன்னுன்.

"மருந்தெல்லாம் எழுதி வாங்கிண்டீங்களா?"

"இங்கே பார்மாலிடியெல்லாம் முடிஞ்சு நாம கிளம்பறச்சே நாலு மணி ஆயிடும். அஸிஸ்டெண்ட் டாக்டர் எழுதித் தரேன்னுர். வாங்கிக்கலாம்!"

"ஒரு பெரிய நிம்மதி!" என்று நிம்மதிப் பெருமூச்சு விட்டாள் பர்வதம்.

சாயங்காலம் வீட்டுக்குப் புறப்படும் போது ஐந்தாம் எண் கட்டிலருகில் போய் நின்று, "என்னை டிஸ்சார்ஜ் பண்ணிட்டாங்க தாத்தா. நான் வரேன்" என்றுன் கேசவன்.

கிழவர் எழுந்து உட்கார்ந்தார்.

"ஆஸ்பத்திரியிலிருந்து டிஸ்சார்ஜ் ஆற வங்க திரும்பி இங்கே வர நெனைப்பே இல்லாமல்தாம்பா போகணும். சௌக்கியமா இரு!"

வீட்டுக்குப் போகும்போது, பர்வதத்திடம், கிழவரைப் பற்றி, எத்தனையோ செல்வமிருந்தும், அவர் வீட்டில் யாருமே வந்து அவரைக் கவனிக்காததைப் பற்றியெல்லாம் கதை கதையாய்ச் சொல்லிக் கொண்டே வந்தான் கேசவன்.

"அது சரி, இந்தக் கிழவர் அந்த ஆபீஸரோட சொந்த அப்பாதானுமா...?" என்று கேட்டாள் பர்வதம்.

"ஆமாம். டாக்டரே தன்னுடைய அஸிஸ்டென்ட்கிட்ட சொல்லிக்கிட்டிருந்ததை நான் கேட்டேன்."

பர்வதம் அப்புறம் ஒன்றும் பேசவில்லை.

"காரணமே இல்லாம இவர் ஏன் அந்த [illegible] வெளிநடப்புச் செய்யறாரு?"

"அட நீங்க ஒண்ணு! அவருக்குத் தூக்கத்திலே நடக்கிற வியாதிங்க!"

— ஆர். அரிகோபி.



## அடுத்த இதழில்...



## விலைவாசி உயர்வால் திணறும் குடும்பத் தலைவி

—ஓர் அலசல்

இரண்டு மாதத்திற்குமேல் மேல் ஆகி விட்டது. கேசவன் ஆஸ்பத்திரியில் இருந்து டிஸ்சார்ஜ் ஆகி வந்து.

மறுபடியும் வாழ்க்கை, ஆபீஸ், நண்பர்கள், வீடு என்று பழைய கதியில் இயங்க ஆரம்பித்து விட்டது.

திருச்சிக்குச் சென்றிருந்த தன் மனைவியை அழைத்துவர நாராயணன் அன்றிரவு ஊருக்குப் போவதாக இருந்தான். எனவே, ஆபீஸ் விட்டதும் அவனுடன் ஓட்டலில் ஏதாவது சாப்பிட்டு விட்டு, அவனை வண்டியேற்றி விட்டு வீட்டுக்குத் தாமதமாகத்தான் வர இயலும் என்று காலையிலேயே வீட்டில் சொல்லி விட்டு வந்திருந்தான் கேசவன்.

சாயங்காலம் ஆபீஸ் விட்டதும் நேராக அருகேயிருந்த ஓட்டலில் அவர்கள் நுழைந்தார்கள்.

அவர்கள் சாப்பிட்டு முடித்து வெளியே வந்தபோது, தெருவில் வாண வேடிக்கையும் பாண்டு வாத்தியமுமாய் ஏதோ ஊர்வலம் அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது.

''இந்த ஊர்வலம் நகர அரை மணி ஆகும் போலிருக்கே!'' என்றுசொல்லிக்கொண்டே வெளியே இருந்த பெட்டிக் கடையில் சிகரெட் வாங்கினான் நாராயணன்.

''என்ன ஸார் சௌக்கியமா?''

கேசவன் திரும்பிப் பார்த்தான். ஆஸ்பத்திரி வார்டுபாய் ரத்தினம் நின்று கொண்டிருந்தான்.

''இன்னைக்கு ஆஃப்ஸார்! அதுதான்சும்மா இப்படி வந்தேன். இந்த ஊர்வலம் எதுக்குத் தெரியுமா ஸார்?'' என்று கேட்டான் ரத்தினம்.

சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு புகையை ஒருதரம் இழுத்து உறிஞ்சி விட்டுக் கொண்டே அவன் சொல்வதைக் கேட்க அருகே வந்து நின்றான் நாராயணன்.

''சொல்லு...!''

''ஐந்தாம் நம்பர் கட்டில்லே, ஒரு தாத்தா இருந்திச்சே அது 'டெத்' ஆயிடுச்சு! அதை எடுத்திட்டுப் போறாங்க. நான் சொல்லலே? அந்தத் தாத்தாவோட பையன் பெரிய ஆபீஸர்னு...! சாவுக்கு இன்னு செலவு பார்த்தீங்களா?''

சர்... சர் என்று சீறிக் கொண்டு ஆகாயத்தில் வாணங்கள் பறந்து சென்று வெடித்துக் கொண்டிருந்தன.

பாண்டு வாத்தியம் முழங்கிக் கொண்டிருந்தது.

தெருவை அடைத்துக் கூட்டம் நெருக்கிக் கொண்டிருந்தது.

மலர் மாலைகளால் அலங்கரிக்கப்பட்டுத் தூரத்தில் வந்து கொண்டிருந்த பெரிய படகுக் காரில் ஆஸ்பத்திரியில் அனாதை போலக் கிடந்த கிழவரின் சடலம் ராஜ மரியாதையுடன் பவனி வந்து கொண்டிருந்தது!

கேசவன் நாராயணனைப் பார்த்தான்.

சிகரெட்டைத் தூர எறிந்து விட்டுத் தெருவில் காறி உமிழ்ந்து கொண்டிருந்தான் நாராயணன்.

"அப்பா, எதிர் வீட்டு சுஜாதாவை எனக்குக் கல்யாணம் செஞ்சு வையுங்க!"

"முடியாது, பக்கத்து வீட்டு 'நீலவேணி'யைத்தான் நீ கட்டிக்கணும்."

"சரி, அவளையாவது சீக்கிரம் பண்ணி வையுங்க!"

— ஆர். வசந்தகுமார்



டாக்டர்: தினமும் நூறு பேஷண்ட் என் கிளினிக்குக்கு வரணும். இதுக்கு ஒரு வழி சொல்லுங்களேன்!

நண்பர்: டோக்கன் நம்பரைத் தொண்ணூறுலே ஆரம்பிங்க, சரியாயிடும்!"

— எஸ். முகம்மது யூசுப்



"அப்பா, நீ எங்கே பொறந்தே?"
"நான் மெட்ராஸிலே பிறந்தேன்!"
"அம்மா நீ?"
"நான் பெங்களூரில்!"
"நான்?"
"டெல்லியிலே ஒரு ஆஸ்பத்திரியில்."
"அப்பன்னா நாம மூணு பேரும் எப்படி ஒண்ணாச் சேர்ந்தோம்?"

— ஆர். ஆர். பூபதி.



"உன்னைப் பெண் பார்க்க வந்தவன், எழுந்து ஓடிட்டானாமே ஏன்?"
"'சமையல் வருமா'ன்னு கேட்டான். 'வரும், உங்களுக்கும் கத்துக் கொடுக்கறேன்'னு சொன்னேன்."

இந்துக்களுக்கும், முஸ்லிம்களுக்குமிடையே ஒற்றுமையை ஏற்படுத்த அரும்பாடுபட்டார் கபீர் தாஸ். ஆனால் இரு பிரிவினருமே அவரை வைதனர். அதைக் கண்ட கபீர் சிரித்தார்.

"ஏனய்யா, இரு பிரிவினருமே உம்மை வசவு பாட, நீர் சிரிக்கிறீரே," என்று அன்பர் ஒருவர் அவரிடம் வினவ, "இதிலாவது இரு தரப்பினரும் ஒற்றுமையாகச் செயல்படுகின்றனரே!" என்றார் கபீர்.

— திருமுருககிருபானந்தவாரியாரின் உபன்யாசத்தில் கேட்டவர்:

என். ஷண்முக சுந்தரம்



# சொன்னதைச் செய்கிறார்கள்!

சென்ற ஆண்டு ஆகஸ்டில் அண்ணா மாவட்டப் பிரச்னைகள் பற்றி இரண்டு கல்கி இதழ்களில் வெளியிட்டிருந்தோமே, நினைவிருக்கிறதா? அதே பிரச்னைகள் இப்போது எப்படியிருக்கின்றன? இதோ நமது ரீ—விசிட் ரிப்போர்ட்......

●● திண்டுக்கல்லுக்கு அருகிலுள்ள தோல் பதனிடும் தொழிற்சாலைகளிலிருந்து வெளிவரும் கழிவு நீரால், கொட்டப்பட்டிக் கத்திரிக்காயிலிருந்து, பல விளை பொருள்கள் பாதிக்கப்பட்டுச் சுமார் ஐயாயிரம் ஏக்கர் விவசாய நிலம் பாழாகிப் போனது பற்றிய விவசாயிகளின் பெருமூச்சுக்களை முன்பு எழுதியிருந்தோமல்லவா! கல்கியில் வெளி வந்த வேளை! கலெக்டர் மாதவன் நம்பியார் பரபரவென்று சில வேலைகளைச் செய்திருக்கிறார். தோல் பதனிடும் தொழிற்சாலை அதிபர்களைக் கூப்பிட்டுப் பேசியிருக்கிறார். முடிவில் இரண்டு கோடி ரூபாய்ச் செலவில், விவசாயம் பாதிக்கப்படாமல் — கழிவு நீர்ச் சுத்திகரிப்புத் தளங்கள் அமைக்க ஏற்பாடு செய்யலாமென்று தீர்மானித்து, அதற்கான வேலைகளும் துவங்கப்பட்டுவிட்டன! முன்பு சென்ற பகுதிகளை இந்த முறைசுற்றிப் பார்த்த போது, முன்பு கழிவு நீர் தேங்கிக் கிடந்த குளம் வறண்டு கிடந்தது. ஒவ்வொரு தொழிற்சாலைக்குள்ளும் ஒவ்வொரு தற்காலிகத் தொட்டி அமைக்கப்பட்டு, கழிவு நீரெல்லாம் அதிலேயே தங்குவதற்கான ஏற்பாடுகளை நேரிலேயே பார்த்தோம். முன்பு மாதிரி துர்நாற்றம் இல்லை. விவசாயிகளெல்லாம் சற்று நிம்மதிப் பெருமூச்சு விட்டிருக்கிறார்கள். பாராட்டுக்கள்!

●● நத்தம். இங்கு, மேற்கு நோக்கிய சிவன் கோவில் பராமரிப்பின்றிக் கிடப்பது குறித்து முன்பு எழுதியிருந்தோம். ஒரு நடவடிக்கையும் இல்லாதது மட்டுமல்ல; இப்போது கோபுரக் கலசத்தைக் கூட யாரோ திருடிக் கொண்டு போய்விட்ட நிலை. இந்நிலையில் உள்ளேயிருக்கும் மதிப்பு மிக்க சிலைகளுக்கும் வாகனங்களுக்கும் என்ன பாதுகாப்பு? ஊர் மக்களின் இன்றைய கேள்வி இதுதான். இனியாவது அறநிலையத் துறை விழித்துக் கொள்ளுமா என்பதுதான் கேள்வி! அப்புறம் நத்தம் சந்தைப் பேட்டை காம்பவுண்டுச் சுவரின் பாழடைந்த நிலைக்கு, நாம் சுட்டிக்காட்டிய பிறகு, அதைப் பழுது பார்ப்பதற்காக ஊராட்சி ஒன்றியப் பொறியாளர் மதிப்பீடு செய்து வருவது மகிழ்ச்சிக்குரிய செய்திதான்.



• பேரணைத் திட்டம்; அடுத்த மாதம் முடிந்துவிடும்.

●● முன்பு, 'பழனி முருகனிடமே பாலிடிக்ஸா?' என்று வெளியிட்டிருந்தோமே, இப்போது எப்படியிருக்கிறது நிலைமை? பலரையும் விசாரித்தபோது, இப்போது பழனிவாசிகளின் அதிருப்திக்குள்ளாகியிருக்கும் விஷயம் ஒன்று தெரிய வந்தது. அதாவது, பழனி கோயில் உண்டியல் பணத்தை எண்ணும்போது, ஒரே நாளில் உண்டியலைத் திறந்து எண்ணுவதில்லையாம். முதல்நாள் கொஞ்சம், மறுநாள் கொஞ்சம் என்று எண்ணுகிறார்களாம். அதனால் சந்தேகத்திற்கு இடமிருக்கிறதல்லவா என்பதுதான் உள்ளூர்வாசிகளின் அச்சம். இந்த அச்சத்தைப் போக்க வழி, கோயில் நிர்வாகம் உண்டியலை ஒரே நாளில் திறந்து எண்ணி



* நத்தம் கோவில்: இப்போது கலசமும் போனது!



* மணிமேகலை:
வேலையை மறுத்து விட்டார்.

முடிப்பதுதான் .செய்யலாமே!என்ன கஷ்டம்?

●● அப்புறம் பழனியில் பரபரப்பாகப் பேசப்படும் இன்னொரு விஷயம், பழனி முருகனுக்குச் சமீபத்தில் கோடி அர்ச்சனை செய்ய ஆரம்பித்திருப்பது. கோடி அர்ச்சனையில் என்ன பரபரப்பு இருக்க முடியும்? 'இருக்கிறது' என்கிறார்கள் உள்ளூர் மக்கள். அதாவது, இதற்கு முன்பு கடந்த 62—ல்தான் முருகனுக்குக் கோடி அர்ச்சனை நடந்ததாம். அது நடந்ததால்தான் சீனப்போர் ஏற்பட்டதாம். தலைவர்கள் மரணமும் நிகழ்ந்ததாம். அதனால், இப்போதும் ஏதாவது நிகழலாம் என்று சொல்லவே, அரசுத் தரப்பிலிருந்து கூட அது பற்றிப் பல பெரியவர்களிடமும் விசாரித்து வருவதாகச் சொல்கிறார்கள். ஆக, கடவுளைக் கும்பிடுவது கூட ஆபத்து என்கிற இந்த மூட நம்பிக்கையை, அரசாங்கம் கூடக் கட்டிக் கொண்டு அழுவதுதான் நமக்கு வேடிக்கையாக இருக்கிறது!

●● நாம் சத்துணவுக் கூடமொன்றில் சத்துணவு ஆயாவாக வேலை பார்த்தபோது, அங்குள்ள தலைமை ஆசிரியர் மற்றும் துணை ஆய்வாளர் ஆகியோரால் சில பிரச்னைகளுக்குள்ளாகி, வேலையை விட்டு விலகி, வெறிச்சோடிப் போன மனநிலையில் மணிமேகலை என்பவர் நம்மிடம் சொன்ன சோகக் கதையைப் படக்கதையாகவே வெளியிட்டிருந்தோ



* தோல் பதனிடும் தொழில் கழிவுநீர்: முன்பு தேங்கியிருந்த இடம் இப்போது வறண்டு கிடக்கிறது!

மல்லவா! விளைவு, மறுபடியும் மணிமேகலை குடியிருக்கும் பழனிக்குச் சற்றுத் தொலைவில் உள்ள சத்துணவுக் கூட வேலைக்கு நியமனம் செய்யப்பட்டு கலெக்டர் ஆர்டர் அனுப்பியிருக்கிறார். அது தொலைவு என்று மணிமேகலை மறுக்கவே, மீண்டும் பழனிக்கு அருகிலுள்ள கருப்பக் கவுண்டன் வலசு என்ற ஊரில் சத்துணவு ஆயாவாக நியமித்து ஆர்டர் அனுப்பியிருக்கிறார்கள். அதையும் மறுத்துவிட்டாராம் மணிமேகலை. நாம் நேரில் சந்தித்துக் கேட்டபோது, "திரும்பவும் வேலையில் சேர என்னவோ போலிருக்கு..." என்றார் மணிமேகலை. எப்படியிருந்தாலும் ரொம்பவும் அக்கறையோடு கலெக்டர் எடுத்த நடவடிக்கைகளை உதாசீனம் செய்தது நல்லதாகப் படவில்லை நமக்கு. இந்த விஷயத்தில் நாம் அநாவசியமாகக் கலெக்டரின் நேரத்தை வீணடித்து விட்டோமோ என்றுதான் வருத்தப்படத் தோன்றுகிறது!

●● கன்னிவாடி அருகிலுள்ள நாயோடை அருவியைத் தடுத்துக் கட்டப்பட்டுள்ள செக்டேம் தூர்ந்து கிடந்ததைச் சுட்டிக்காட்டியிருந்தோமல்லவா, உடனடியாகத் தூர் எடுத்துவிட்டிருக்கிறார்கள். அதே போல் ஒட்டன்சத்திரத்தில் மூடப்பட்டுக் கிடந்த இராணி மங்கம்மாள் போக்குவரத்துக் கழகச் சாலையோர உணவு விடுதி, தற்போது மிகவும் சிறப்பான முறையில் நடைபெற்று வருகிறது.

●● திண்டுக்கல்லுக்கு வருவோம். பச்சேரி ஸ்ரீநல்லதங்காள் இஞ்ஜினியரிங்



* நகராட்சி குப்பைக் கிடங்கு: மாற்றப்பட்டு விட்டது.



* பழனி: இப்போதைய பரபரப்பு.



* புது கலெக்டர்: உற்சாகமாக நடவடிக்கை.



* கார் ஷெட் மாதிரி ஒரு கல்லூரி: இப்போதும் மறுப்பார்களோ!

கல்லூரியை நினைவிருக்கிறதா? சென்ற அண்ணா மாவட்ட விசிட்டில் ஒரு கார் ஷெட்டில் கல்லூரி நடப்பது குறித்து எழுதியிருந்தோமே, அதுதான்! விஷயம் வெளி வந்தவுடன் கல்லூரித் தரப்பிலிருந்து அப்படியெல்லாம் இல்லையென்று மறுப்பு வந்ததே. இப்போது எப்படியென்று பார்க்க நேரில் போனோம்.

அதே கார் ஷெட்தான்! மாற்றமே இல்லை. ஆஸ்பெஸ்டாஸ் ஷீட்டுகளுக்கு அடியில் தான் வகுப்பறைகள். கூரை வேய்ந்த ரைஸ் மில் மாதிரியான இடம்தான் ஹாஸ்டல் — சுமார் நானூறு சதுர அடியுள்ள ஹால் போன்ற இடத்தில்தான் நெருக்கம் நெருக்கமாகக் கட்டில்கள் போடப்பட்டிருந்தன. மாணவர்களிடம் பேச்சுக் கொடுத்தபோது, 'அட்மிஷனுக்கே இருபதாயிரத்திலிருந்து நாற்பதாயிரம் வரை வாங்குகிறார்கள். அப்படியிருந்தும் எங்கள் கதியைப் பார்த்தீர்களா?' என்று அழாத குறையாகத்தான் சொன்னார்கள். இதைவிட லேடீஸ் ஹாஸ்டல் மோசமாம். பார்க்கச் சென்றபோது, வார்டன் உள்ளே விடவே மறுத்துவிட்டார். நன்றாக இருந்தால் மறுப்பானேன்?

கடைசியாகக் கல்லூரி முதல்வர் விஜயராகவனிடம் கேட்டபோது, "பக்கத்தில் இருக்கும் முத்தனம்பட்டியில் எண்பது ஏக்கர் நிலம் வாங்கிப் போட்டிருக்கிறோம். கட்டடங்கள் கட்ட ஆரம்பிக்கப்போகிறோம். வெளியே பார்ப்பதற்குத்தான் இது இப்படி. உள்ளுக்குள் எங்களிடம் இருக்கும் வசதி யாரிடமும் இல்லை...." என்றார். உண்மையாக இருந்தால் நமக்கும் சந்தோஷம்தான்.

•• அப்புறம் திண்டுக்கல்வாசிகள் மகிழ்ச்சியும் கவலையும் கலந்து தெரிவித்த இன்னொரு விஷயம், குடிநீர்ப் பிரச்னை. இப்போது மூன்று நாட்களுக்கு ஒருமுறைதான் குடிநீர் சப்ளை என்றாலும், பக்கத்திலிருக்கும் வைகையாற்றுப் படுகையான பேரணையிலிருந்து சுமார் ஒன்பது கோடி செலவில் திண்டுக்கல்லுக்குக் குடிநீர் கொண்டு வரும் வேலை மளமளவென்று நடந்து கொண்டிருக்கிறது. அநேகமாக அடுத்த மாதமே இந்த வேலை பூர்த்தியாகிவிடலாம். பிறகு திண்டுக்கல்வாசிகளுக்குக் குடிநீர்ப் பிரச்னையே இருக்காது.

•• மேலும் திண்டுக்கல் நகருக்குள் எடுக்கப்பட்ட சில நடவடிக்கைகள்: நகருக்குள் உள்ள அரசு முத்தையா பிள்ளை மகளிர் கலைக் கல்லூரியில் போதுமான வகுப்பறைகள் கூட இல்லாதிருந்த நிலையை மாற்ற இப்போது ஐந்து லட்சம் செலவில் புதிய கட்டடங்கள் கட்டும் பணி துவங்கப்பட்டிருக்கிறது. நேருஜி நகர் அருகிலுள்ள நகராட்சிக் குப்பைக் கிடங்கு மாற்றப்பட்டு, அந்த இடத்தில் இப்போது பதினைந்து லட்சம் செலவில் கலையரங்கம் ஒன்று கட்டப்படுவதற்கான பணிகள் நடந்து கொண்டுள்ளன. ஒழுங்கி

கொண்டிருந்த திண்டுக்கல் அரசு மருத்துவ மனை ஆபரேஷன் தியேட்டர் ஓடுகள் இப்போது மாற்றப்பட்டுள்ளன. அ.தி.மு.க. தொழிற்சங்கத் தலைவரான முத்து கோபால் என்பவர், ஐந்தர்லாந்து ரோட்டை ஆக்ரமித்தபடி (ஆக்ரமிப்பே இல்லையென்று இவரும் நமக்கு மறுப்பு எழுதினர்.) கட்டியிருக்கும் கட்டடத்தை அப்புறப்படுத்துவதற்காக, முதலில் நோட்டீஸ் விடப்பட்டுள்ளது.... இப்படி நாம் குறிப்பிட்டிருந்த பல விஷயங்களுக்கும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருந்ததை நேரிலேயே பார்த்தோம். ஆயினும் திண்டுக்கல் நகருக்கே சுகாதாரக்கேடாக இருக்கும் கோபால சமுத்திரமும் அரண்மனைக் குளமும் இன்னமும் அப்படியேதான் கிடக்கின்றன என்பது மிக மிக வருந்தத்தக்கது.

இறுதியில் அண்ணா மாவட்டக் கலெக்டர் மிருத்யுஞ்சய் சாரங்கியைச் சந்தித்தோம். நாம் சந்தித்தபோது, அவர் கலெக்டர் பொறுப்பேற்று ஏறத்தாழ மூன்று வாரங்களே ஆகியிருந்தாலும், முந்தைய கலெக்டர் மாதவன் நம்பியார் கல்கிக்குக் கொடுத்திருந்த பேட்டியின்படி, எடுக்கப்பட்டிருந்த நடவடிக்கைகள் பற்றியும் எடுக்கப்பட்டுக் கொண்டிருக்கும் நடவடிக்கைகள் பற்றியும் சுமார் இரண்டே கால் மணி நேரம் விரிவாகப் பேசினர். தனிப்பட்ட முறையில் ஆர்வம் காட்டி, முன்பு நாம் எழுதியிருந்த பிரச்னைகளுக்கெல்லாம், 'கல்கியின் கேள்வியும் எடுக்கப்பட்ட நடவடிக்கைகளும்' என்ற தலைப்பில் டைப் செய்யப்பட்ட நகல் ஒன்றையே நம்மிடம் கொடுத்தார்.

'பல கலெக்டர்கள் நத்தம் பகுதிக்கு வந்ததே இல்லை' என்று நத்தம் பகுதி மக்கள் நம்மிடம் சொன்னதை இவரிடம் சொன்னபோது, "நத்தம் பகுதிக்கு மட்டுமல்ல; மாவட்டத்தின் எல்லாப் பகுதிகளுக்கும் அடிக்கடி சென்று, மக்களின் பிரச்னைகளைப் புரிந்து கொண்டு நடவடிக்கை எடுக்கிறேன்...." என்றார். மற்ற பிரச்னைகளையும் அவரிடம் நாம் விளக்கியபோது, ஒவ்வொன்றையும் கவனமாகக் கேட்டுக் கொண்டதோடு, குறித்தும் வைத்துக்கொண்டார். தொடர்ந்து நடவடிக்கை எடுப்பதாகவும் உறுதியளித்தார்.

ஆக, தோல் பதனிடும் தொழிற்சாலைக் கழிவு நீர்ப் பிரச்னையிலிருந்து, நாம் கவனத்திற்குக் கொண்டு போன மற்ற பிரச்னைகளுக்கும் உடனடியாக நடவடிக்கை எடுத்த பழைய கலெக்டர் மாதவன் நம்பியார், மக்கள் பிரச்னைகளைத் தீர்ப்பதில் கலெக்டராகமட்டுமல்லாமல் தனிப்பட்ட முறையிலும் உற்சாகமாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கும் இப்போதைய கலெக்டர் மிருத்யுஞ்சய் சாரங்கி ஆகிய இருவருக்கும் நமது மனப்பூர்வமான பாராட்டுக்கள்; கல்கியின் சார்பிலும் அண்ணா மாவட்ட மக்கள் சார்பிலும் நமது நன்றிகள்!

— மஞ்சு



# தலைமறைவானவர் அமைச்சராமே?

• ஆர். ஜெ. பாலன், சிவகங்கை.

**? பிரதமர் அலுவலகத்திற்குச் சென்ற அஸ்ஸாம் அமைச்சருடைய சட்டையைக் கழற்றிச் சோதனையிட்டது குறித்தும் பிரதமர் அதற்கு வருத்தம் தெரிவித்தது குறித்தும் என்ன நினைக்கிறீர்கள்?**

! பிரதமர் அழைப்பின் பேரில்தான் அஸ்ஸாம் முதல்வர் மஹந்தாவும், அவருடைய சக அமைச்சர் புக்கானும் பிரதமரைப் பார்க்கச் சென்றார்கள். அப்படியிருந்தும் பிரதமர் அலுவலகத்தில் அவர்களை மெட்டல் டிடெக்டர் வழியில் அழைத்துச் செல்ல, அப்போது டிடெக்டர் அலறவே புக்கானை விசாரித்திருக்கிறார்கள். அதற்கு புக்கான் வேறொன்றுமில்லை, எனது அரைஞாண் கொடியிலுள்ள தாயத்துதான் என்று அதை எடுத்துக் காண்பித்த பிறகும் திருப்தியடையாமல், சட்டையையும் கழற்றச் சொல்லியிருக்கிறார்கள். பிறகு பிரதமர் வருத்தம் தெரிவித்து விட்டாலும் கூட இந்த நிகழ்ச்சி மிகவும் அவமானகரமான ஒன்றுதான். எனவே புக்கான் பிரதமரைப் பார்க்காமல் திரும்பி விட்டார். இப்படித் தமது சக அமைச்சர் அவமானப்பட்டபோது மஹந்தாவும் பிரதமரைப் பார்க்காமலேயே திரும்பியிருக்க வேண்டும். அப்படி அவர் திரும்பாததுதான் மேலும் வருந்தத்தக்கது.

• டி. கார்த்திகேயன், குடியாத்தம்.

**? இங்கிலாந்தில் மூன்று முறை வெற்றி பெற்ற தாட்சர் பற்றி?**

! மூன்றாவது முறையாகவும் அவர் வெற்றி பெற்றிருப்பதற்குக் காரணம், நம்ம ஊர் மாதிரியான தனி மனிதர் வழிபாடு அல்ல. உலக யுத்தம் முடிந்ததும் சர்ச்சிலைக் கூட வீட்டுக்கு அனுப்பி விட்டவர்கள் பிரிட்டிஷ் மக்கள்! இன்று மார்கரெட் தாட்சரின் வெற்றிக்கு முக்கியக் காரணம் அவர் பண வீக்கத்தை மட்டுப்படுத்தி, விலைவாசியை ஒரு கட்டுப்பாட்டில் வைத்ததுதான்.

• இராமலிங்க், தக்கலை.

**? உங்களை மூக்கின் மேல் விரல் வைக்கத் தூண்டிய சம்பவம்?**

! ஜலதோஷம்!

• லில்லி, சென்னை — 18.

**? வரதட்சணைக் கொடுமை, குருதட்சணைக் கொடுமை (பள்ளி, கல்லூரிகளில் பெறப்படும் கட்டாய நிதி) — என்ன வித்தியாசம்?**

! வித்தியாசங்களைவிட ஒற்றுமைகளே அதிகம். நிர்ப்பந்தம் காரணமாக இரண்டையுமே பாதிக்கப்படுபவர்களால் மறுக்க முடிவதில்லை. இரண்டையுமே ஒழித்துக் கட்ட எளிதில் சட்டம் இயற்றிவிட முடியும் என்றாலும் சட்டத்தை மீறுகிற மனப் பக்குவம் மக்களிடம் வளரவில்லை. இரண்டையும் எதிர்த்துச் சிம்மக் குரல் கொடுத்து முழங்குபவர்கள் கூடத் தங்களுக்கென்று வரும்போது விட்டுக் கொடுத்து விடுகிறார்கள்!

• கூ. தியாகராஜன், நெய்வேலி.

**? 'தூத்துக்குடியிலிருந்து அண்ணா அறிவாலயத்திற்காக வழங்கப்பட்ட நிதியோடு கருணாநிதி சென்னை திரும்ப முடியாது' என்று சபாநாயகர் பேசியிருக்கிறாரே?**



! சபாநாயகரின் பேச்சுக்குப் பயந்து கொண்டுதான், வழக்கமாக நிதியை ரூபாய் நோட்டுக்களாகவே கொண்டு வரும் கருணாநிதி, தூத்துக்குடி நிதியை மட்டும் டி. டி. எடுத்துத் தரச் சொல்லிக் கொண்டு வந்தாராம். இதைக் கருணாநிதியே சொல்லியிருக்கிறாரே!

• ஆர். மாதவ்ராமன், கிருஷ்ணகிரி.

**? வில்லன் நடிப்பில் சத்யராஜ், ஜெய்சங்கர், ராதாரவி ஆகியோரில் யாருடைய அலாதியானது?**

! சந்தேகமில்லாமல் சத்யராஜ்தான். நிஜ வாழ்க்கையில் எந்த வில்லனும், பார்த்த

வுடன் வில்லன்தான் என்று முடிவு கட்டுகிற அளவுக்குத் தனியானதோர் அம்சத்தில் இருப்பதில்லை. இந்த யதார்த்தத்தை முதன் முதலில் பிரதிபலித்தது சத்யராஜ்தான். மற்றவர்கள் வெறும் சினிமாத்தனமான வில்லன்கள். ஆனால் இப்போது சத்யராஜை ஹீரோவாக்கி விட்டார்களே!

*** வலங்கைஜி. ராஜசேகர், வளையமாபுரம்.**

**? 'இலங்கைத் தமிழர்களுக்கு விமானத்திலிருந்து உணவுப் பொருள்களைப் போட்ட போது, அவர்கள் மகிழ்ச்சியடைந்து, 'புரட்சித் தலைவர் வாழ்க!' என்று குரல் எழுப்பினார்கள்' என்று பண்ருட்டி ராமச்சந்திரன் பேசியிருக்கிறாரே?**

! சிரித்துச் சிரித்து வயிறே புண்ணாகிவிட்டது போங்கள்!

*** எம். கே. வெங்கட்ராமன், சென்னை — 35.**

**? கிரிக்கெட்டை அன்று மட்டமாக விமர்**



* வித்தியாச வில்லன்

* இவரைப் பாதிக்கவில்லையே?

**சித்த பெர்னார்ட்ஷா இன்றிருந்திருந்தால் என்ன சொல்லியிருப்பார்?**

! 'பதினொரு முட்டாள்கள் விளையாடுவதைப் பதினொராயிரம் முட்டாள்கள் பார்க்கிறார்கள்' என்று விமர்சித்ததைத்தானே சொல்கிறீர்கள்? இன்றைக்குப் பதினொராயிரம் பேர்தானா கிரிக்கெட் பார்க்கிறார்கள்? அதனால் டி. வி. மூலம் பார்ப்பவர்கள் உள்பட பதினொரு மில்லியன் என்று சொல்லியிருப்பாரே தவிர, வேறு மாதிரி தமது கருத்தை மாற்றிக் கொண்டிருக்க மாட்டார்.

*** ஜுலம்மாபீ, சேமக்கோட்டை.**

**? சமீபத்தில் நீங்கள் கேட்டு அதிர்ச்சியடைந்த செய்தி?**

! இராமேஸ்வரம் வந்து சேர்ந்த இலங்கைத் தமிழ் அகதிக் குழந்தைகள், நின்று கொண்டிருந்த ஒரு பஸ்ஸுக்குள் விளையாடிக் கொண்டிருந்தவர்கள், நமது ஒரு ஹெலிகாப்டர் சப்தத்தைக் கேட்டதும் மிரண்டுபோய்க் கீழே பஸ்ஸுக்கு அடியில் ஒளிந்து கொண்டது பற்றிய செய்தி. பல ஆண்டுகளாகச் செய்திப் பத்திரிகைகளால் உணர்த்த முடியாத இலங்கையின் நிதர்சன சோகத்தை அந்தக் குழந்தைகள் ஒரு விநாடியில் உணர்த்தி விட்டார்கள்!

*** சி. தங்கவேல், போடிநாயக்கனூர். ***

**? 'தலை மறைவானவர்' என நீதிமன்றம் அறிவித்த நபர் மத்தியப்பிரதேச அமைச்சராக இருக்கிறாராமே?**

! அவர் மீது ஒரு போலீஸ் கேஸ் இருந்ததால் நீதிமன்றம் அவரைக் கைது செய்யப் பலமுறை வாரண்டு அனுப்பியும் அவரைப் பிடிக்க முடியவில்லை. அதனால் கடைசியில் அவரைத் 'தலை மறைவானவர்' என்று நீதிமன்றம் அந்த வழக்கைத் தள்ளுபடி செய்து விட்டது. அப்படிப்பட்டவர்தான் இன்றைக்கு மாண்புமிகு அமைச்சராக இருக்கிறார்! இது நிஜம். ஆக, ஆனந்தவிகடனின் அட்டைப்பட ஜோக்குக்கு எகிறிக் குதித்தவர்கள் இதற்கு என்ன பதில் சொல்லப் போகிறார்களாம்?

*** நா. நீதயாளன், அயன்புரம்**

**? இந்த வெயில் காலத்தை எப்படிச் சமாளிக்கிறீர்கள்?**

! நான் சமாளிப்பது ஒரு பக்கம் இருக்கட்டும். சென்னை நகர 'மெட்ரோ வாட்டர்' சமாளிக்கிற விதம் உண்மையிலேயே பாராட்டுக்குரியது. இந்த வேகத்தையும் புத்திசாலித்தனத்தையும் எதிர்காலத்தில் இம்மாதிரி நிகழாமல் பார்த்துக் கொள்ளும் நிரந்தரத் திட்டங்களுக்குச் செலவிடுவதில்லையே என்பதுதான் நமது வருத்தம்.

*** ஏ. வி. செம்மேனிராஜ், அல்லிநகரம்.**

**? எங்கள் தலைவன், வங்கத்தின் சிங்கம் ஜோதி பாசுவை ஊழலின் நிழலில் என்று வர்ணித்தீர்களே (31.5.87 கல்கி), உங்கள் மரமண்டையில் உறைப்பதற்கென்றே தீக்கதிரில் அரைப்பக்கத்தைத் தியாகம் செய்து விளக்கியிருக்கிறார்கள். படித்தீர்களா?**

! ஊழல் நடந்திருப்பதை ஆடிட் ரிப்போர்ட் உறுதிப்படுத்தியிருக்கிறது. அமைச்சரே ஒப்புக் கொண்டு விசாரணைக்கு உத்தரவிட்டிருக்கிறார். டெலிகிராஃப் மட்டுமின்றி ஹிந்துஸ்தான் டைம்ஸ் போன்ற தேசிய நாளிதழ்களும் தலையங்கங்கள் எழுதியுள்ளன. இவ்வளவுக்குப் பிறகும் என் மரமண்டையைப் பொசுக்கத் தீக்கதிர் 'தியாகம்' செய்வதாகத் தாங்கள் கருதுவதில் எனக்கு ஆட்சேபனை இல்லை. அது உங்கள் உரிமை.

*** ரூ. 15 பரிசு பெறுபவர்:**

**சி. தங்கவேல்,**
**35, கீழ மறவர் தெரு,**
**போடிநாயக்கனூர் — 626 513.**



# கடமை கண்ணியம் கட்டுப்பாடு

ஒவ்வொரு ஃப்ரேமிலும், ஒவ்வொரு ஃப்ரேமிலும் சத்யராஜ் ஆஜராகிறார். அந்த அடக்கி வாரப்பட்ட கிராப், மிக லேசாக முறுக்கி விடப்பட்ட மீசை, அவர் அணியும் காக்கி பாண்ட் — மேக்கப்பில், நடை, உடை பாவனையில் சத்யராஜ் கவனம் செலுத்தியிருக்கிறார்.

ஸீரியஸான கதையில் ஒரு ரிலீஃபுக்காகப் பாட்டு இருந்திருக்கலாம். அதுதான் வேண்டாமென்றாகிவிட்டது. நகைச்சுவை கூடவா வேண்டாம். மருந்துக்காவது.... ஊஹூம்!

முதலில் கொஞ்ச நேரத்திற்குக் கடந்த காலம், நிகழ் காலம் கடந்த காலம், நிகழ் காலம் என்று பாண்டி ஆடுகிறார்களா? கொஞ்சம் குழப்பமாய்த்தானிருக்கிறது. எது கடந்த? எது நிகழ்கிற?

எங்கும் சத்யராஜ், எதிலும் சத்யராஜ் என்று தீர்மானித்துவிட்டதால், மற்றவர்கள் எல்லாம் மாஜிக் ஸ்லேட் எழுத்துக்கள் போலப் படம் பார்க்கும்போது தெரிகிறார்கள். விட்டு வந்த பிறகு மறைகிறார்கள்.

சத்யராஜைச் சுற்றி மூன்று பெண்கள். முன்னாள் காதலி ஜீவிதா. ஓரிரு இடங்களில் குழறுவதைத் தவிர மற்ற இடங்களில் ஆஜர் கொடுத்திருக்கிறார். நளினியின் பிராமண பாஷையில் செயற்கைச் சாயம் நிறைய. தம்பியைக் கொன்ற இன்ஸ்பெக்டரைப் பழி வாங்க வேண்டுமென்பதற்காகச் சளைக்காமல் முயற்சி செய்கிறார். எல்லாம் புஸ்ஸாகிப் போக, கடைசி நேரத்தில் கட்சி மாறுகிறார். ஜெயித்தது கீதாதான். விலை மாது வேஷம் என்பதால் கவர்ச்சிக்குக் கவர்ச்சி. கண்ணீருக்குக் கண்ணீர். பரிபூரணமாக நம்முடைய அனுதாபத்தைச் சம்பாதிக்கிறார். அது சரி, தமிழ்ப் பட உலகம் இவரை ஏன் கவனிக்காமல் விட்டு விட்டது?

உணர்ச்சி வசப்படும் அநியாயத்தைக் கண்டு பொருமும் இன்ஸ்பெக்டர் குடிக்கட்டும். வேண்டாமென்று சொல்லவில்லை. ஆனாலும் இப்படியா? தூக்கு தூக்கென்று தூக்கப்படும் இன்ஸ்பெக்டர் காரெக்டர் 'ஜிர்' என்று சறுக்குகிற மாதிரி இல்லை?

இந்தக் கதாநாயகனுக்கு எத்தனை வில்லன்கள்? போலீஸ் மேலதிகாரி (கள்), வக்கீல், பீட்டர், கடத்தல் புலி மைக்கேல் ராஜ். கடைசியில் மோதல் சத்யராஜுக்கும் மைக்கேல் ராஜுக்கும் என்று கதை திசை மாறுவதுதான் வேடிக்கை.

கமலா காமேஷின் அழுகை மனத்தில் ஒட்டவில்லை. டெல்லி கணேஷ் வீணடிக்கப் பட்டுவிட்டார் — சத்யராஜ், கீதாவிற்குப் புடைவை வாங்கிக் கொடுக்கும் ஸீன் நெகிழ வைக்கிறது — தப்பி ஓடும் பயங்கரவாதியைச் சுட்டால் இன்ஸ்பெக்டர் கையில் விலங்கு ஏறுமா? — கடைசி கார் சேஸிங் விறுவிறுப்பு — ஏய் மாட்டு வண்டி, ஓரமாப் போ — மைக்கை ஆன் பண்ணிவிட்டு சத்யராஜ் குற்றவாளியை மொத்துவது டாப் — ஒரு நேர்மையான போலீஸ் அதிகாரி, அரசியல் அவலங்களில் சிக்கித் தவிப்பதைப் புதுமையான ஆழத்துடன் படம் சொல்கிறது — படம் சொல்கிறது.

— ஜெயமன்மதன்

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.

நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை—600 032. போன்: 431543 434157.

ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை—600 034. போன்: 473389.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ 78/—; வெளி நாடு கப்பல் தபால் ரூ 250/—; விமானத் தபால் ரூ 650/—. (ஆறு மாதச் சந்தா ஏற்கப்படும்.)



காப்பியோடு சேர்த்தி: பிரிட்டானியா மாரி நேர்த்தி.




பிரிட்டானியா

மாரி

LINTAS BIN MRE 13 2416 TM

